# பாமெல்லா வாய் திறந்தால் பாரத அரசு வீழ்ந்து விடும்!

—செம்பியன்

"என்னுடைய லீலைகளையெல்லாம் விரிவாகக் கூறப் போனால் பிரிட்டிஷ் அரசே விழ்ந்து விடும்'' என்று கூறியிருக்கிறார் பாமெல்லா சிங். அரசாங்கத்தில் உயர் பதவியில் இருக்கும் யார் யாருடன் தனக்குத் தொடர்புகள் இருந்தன, இருக்கின்றன என்ற விவரங்களைக் கூறி, பத்திரிகை நிறுவனங்களிலிருந்தும் படாதிபதிகளிடமிருந்தும் பணம் பண்ணப் பாமெல்லா முயற்சி செய்கிறார். ''அரச குடும்பத்தினர் கூட விதிவிலக்கு இல்லை'' என்கிறார். லண்டன் மாநகரமே கலகலத்துப் போயிருக்கிறது. பார்க்கப் போனால் இது சுண்டைக்காய் சமாசாரம்தான். கவர்ச்சிக் கன்னி பாமெல்லா சிங், (பின்னால் பாமெல்லா போர்டெஸ் ஆனவர்) இந்தியாவில் பிறந்து வளர்ந்தவர் ஆனபடியால், இங்கிலாந்து அரசிடம் தனது கைவரிசையைக் காட்டுவதற்குப் பதில், தாய்நாட்டுப் பற்றுடன் இந்திய அரசையே தாக்கியிருந்தால் இந்தச் சுண்டைக்காய் விஷயம் பூசணிக்காய் விவகாரமாகி இன்னும் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியிருக்கும். இத்தகைய ஓர் அருமையான வாய்ப்பைப் பாமெல்லா நழுவ விடாமல் இருந்திருந்தால்...



"என்னுடைய லீலைகளையெல்லாம் விரிவாகக் கூறப் போனால் இந்திய அரசே வீழ்ந்து விடும்' என்று பாமெல்லா கூறியிருக்கிறாரே, அது பற்றி...?'' என்று ஒரு பத்திரிகை நிருபர் ராஜீவிடம் கேட்கிறார்.

ராஜீவுக்குப் பிரமாத கோபம் வந்து விடுகிறது. "கண்ட கண்ட குரைக்கும் நாய்களுக்கெல்லாம் நான் பதில் கூறிக் கொண்டிருக்க வேண்டியதில்லை'' என்று சீறுகிறார்.

உடனே ஜெத்மலானி ஓர் அறிக்கை விடுகிறார்: ''பிரதமர் குரைக்கும் நாய் என்று குறிப்பிட்டது பாமெல்லாவையா, அல்லது பத்திரிகை நிருபரையா? பத்திரிகைகள் நாட்டில் ஜனநாயகப் பணியாற்றி வருவது பிரதமருக்குத் தெரியாதா? பத்திரிகைகள் குரைக்கும் நாய்கள்தாம். அவை திருடனைக் கண்டால் குரைக்கவே செய்யும்!''

இப்படி ஒரு முன்னுரை தந்து விட்டு, அடுத்த நாள் முதல் பிரதமர் மீது பத்துப் பத்து கேள்விக் கணைகளாகத் தொடர்ந்து பத்து நாட்களுக்குத் தொடுக்கிறார் ஜெத்மலானி. அவை எக்ஸ்பிரஸ் பத்திரிகையில் பிரசுரமாகின்றன. அந்தக் கேள்விகள், 'பிரதமர் லட்சத் தீவுகளில் விடுமுறை கொண்டாடிய போது அங்கு வந்த இதாலிய உறவினர் ஒருவருடைய மச்சானுக்கும் பாமெல்லா போர்டெஸ்ஸுக்கும் தொடர்பு உண்டா?' என்பதில் ஆரம்பித்து, 'பாமெல்லாவுக்கு ஸ்விஸ் வங்கியில் கணக்கு இருக்கிறதா? அவர் இந்தியப் பிரஜையா? இங்கிலாந்து பிரஜையா?' என்று வளர்ந்து,

'பாமெல்லாவுடைய பஹாமா நாட்டுத் தோழியும் சோனியாவும் ஸ்டாக்ஹோமில் சந்தித்ததுண்டா?' என்று கேட்பதுடன் முடிகின்றன.

நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகையைக் கையில் சுருட்டி வைத்துக் கொண்டு ஆட்டியபடி உரிமைப் பிரச்னை, ஒத்தி வைப்புத் தீர்மானம், கேள்வி நேரம் போன்ற பல யுக்திகளைக் கையாண்டு பிரச்னையைக் கிளறுகிறார்கள். பலராம் ஜாக்கர் முப்பத்தோரு எதிர்க்கட்சி அங்கத்தினர்களை சஸ்பென்ட் செய்து, மறுநாள் சஸ்பென்ஷன் உத்தரவை ரத்து செய்கிறார்.

நாடெங்கிலுமுள்ள இந்தியன் எக்ஸ்பிரஸ் காரியாலயங்களில் வருமான வரி இலாக்கா ரெய்டுகள் நடத்திப் பார்த்து விட்டு, ஒன்றும் அகப்படாமல் போனாலும், "எங்களுக்குக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் ரெய்டுகள் நடந்தன" என்று சொல்லி அசடு வழிகிறது.

பாமெல்லா சிங்கும் கஷோகியும் சேர்ந்திருப்பது போல் ஒரு புகைப்படத்தை பிரிட்டிஷ் பத்திரிகைகள் வெளியிட, அதைக் கத்தரிக் கோல் செய்து பம்பாய் வீக்லி பிரசுரிக்க, போஃபோர்ஸுக்கும் கஷோகிக்கும் உள்ள தொடர்பை உறுதிப்படுத்தும் ஆவணம் ஒன்றினை சித்ரா சுப்பிரமணியம் அனுப்பி வைக்க, ஹிந்து பத்திரிகை, என். ராமின் விளக்க உரையுடன் அதைப் படம் பிடித்துப் போட, நாடாளுமன்றத்தில் ஏக அமளி துமளி.

நாடாளுமன்ற ஆய்வுக் குழு ஒன்றை அமைத்துப் பிரச்னையை ஆராய ராஜீவ் சம்மதிக்கிறார். ஆனால், 'பாமெல்லா சிங்கைச் சந்திக்க யாரும் வெளிநாடு போகக் கூடாது' என்று நிபந்தனை விதிக்கிறார். 'உண்மைகளை மூடி மறைக்கவே இந்த நிபந்தனை' என்பதாக எதிர்க்கட்சிகள் ஆட்சேபித்து, நாடாளுமன்றக் கூட்டுக் குழுவைப் புறக்கணிக்கின்றன. ராஜீவ் நிம்மதிப் பெருமூச்சு விடுகிறார். ஆளும் கட்சி விசுவாசியான ஒருவர் தலைமையில், நாடாளுமன்றக் குழு, 'ஒரு தவறும் நடக்கவில்லை' என்று தீர்ப்பு வழங்குகிறது. 'இது கண் துடைப்பு நாடகம்' என்று எதிர்க் கட்சிகள் சாடுகின்றன.

இதற்கிடையில், சுப்பிரமணிய சுவாமி, தாம் நிறைய ஆராய்ச்சி செய்து பல விஷயங்களைக் கண்டுபிடித்திருப்பதாகக் கூறுகிறார். துப்பறியும் நிறுவனமான ஃபேர்ஃபேக்ஸின் தலைவர் ஹெர்ஷ்மன், தம்மிடம் பேசும் போது ஃபேர்ஃபேக்ஸ் உளவாளிகளுள் ஒருவர் பாமெல்லா என்று ஒப்புக் கொண்டிருப்பதாக சு. சுவாமி சொல்கிறார். அது மட்டுமல்ல. வி. பி. சிங் நிதி மந்திரியாக இருந்த போது எதிர்க் கட்சித் தலைவர்களின் அயல்நாட்டு வங்கிக் கணக்குகளை ஆராய பாமெல்லாவைத் தான் அவர் நம்பியிருந்ததாகவும், மாய வலை விசிப் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள பாமெல்லா முயற்சி செய்ததாகவும் சு. சுவாமி கூறுகிறார். இது தொடர்பான கையெழுத்தில்லாத பல கடிதங்களின் ஜெராக்ஸ் பிரதிகள் தம்மிடம் இருப்பதாகப் பீற்றிக் கொள்கிறார். அவர் வெளியிடும் எதிர்க் கட்சித் தலைவர்கள் பட்டியலில் ஹெக்டே, தேவிலால், என்.டி.ஆர்., கருணாநிதி முதலியோர் உள்ளனர். ஹெக்டே பம்பாய்க்குப் பறந்து போய் அங்கு வழக்கு தாக்கல் செய்ய, வி. பி. சிங்கோ, "கருணாநிதி ஆட்சியைக் கவிழ்க்க இ. காங்கிரஸ், சு. சுவாமியுடன் சேர்ந்து நடத்தும் கூட்டுச் சதி இது" என்று அறிக்கை விடுகிறார்.

தமிழக சட்டமன்றத்தில் ஒரு தி. மு. க. உறுப்பினர், "கலைஞர் ஆட்சியைக் கவிழ்க்க இங்குள்ள பாமெல்லா போர்டெஸ்களாலேயே முடியாத போது, அயல் நாட்டுப் பாமெல்லா என்ன கிழித்து விட முடியும்? ஆடையை வேணுமானால் கிழித்துக் கொள்ளலாம்!" என்று கூற, செருப்புகள் பறக்கின்றன; பேப்பர் வெய்ட்டுகளுக்குச் சிறகுகள் முளைக்கின்றன; மைக்குகள் உடைத்தெறியப்படுகின்றன! தமிழ்க் குடிமகன் சபையை ஒத்தி வைத்து விட்டுத் தமது அறைக்குச் செல்கிறார். மீண்டும் சபை கூடும் போது கருணாநிதி, "கடந்த காலத்தில் பல தவறுகள் நடந்துள்ளன. நடந்ததை மறப்போம்; இனி நடப்பவை நல்லவையாக இருக்கட்டும்" என்கிறார்.

இதற்கிடையில் பாமெல்லா ரகசியமாக இந்தியாவுக்கு வந்து கோவாவில் ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்கியிருப்பதாகத் தெரிய வர, பத்திரிகை நிருபர்கள் படையெடுக்கின்றனர். பாமெல்லா சிக்குகிறார்; காமிராக்கள் கிளிக்குகின்றன!

"தமிழக அரசைக் கவிழ்க்க நடக்கும் சதியில் நீங்கள் சம்பந்தப்பட்டிருப்பதாகப் பேசப்படுகிறதே" என்று ஒரு நிருபர் கேட்க, பாமெல்லா அழகாகப் புன்னகை புரிந்து,

"எனக்கு அந்த மாதிரி அற்ப ஆசையெல்லாம் கிடையாது. நான் முயன்றால் பிரதமராக வரத்தான் முயற்சி செய்வேன். இதற்காகப் புதிய கட்சி தொடங்க இருக்கிறேன். தேர்தல் நெருங்குகிறது. என் லட்சியம் காங்கிரஸைப் பதவி இறக்குவதுதான். என் முதல் எதிரி ராஜீவ் காந்திதான். இதர எதிர்க் கட்சிகள் விரும்பினால் என் தலைமையை ஏற்று, எனக்கு ஒத்துழைப்புத் தரலாம்" என்கிறார்.

இதைக் கேட்டு வி.பி. சிங், ஹெக்டே, தேவிலால் வகையறா மூர்ச்சித்து விழ, இந்திய மக்களோ தேர்தல் பிரசாரத்துக்குச் சிம்ம ரதத்தில் பவனி வரப் போகும் கவர்ச்சிக் கன்னி பாமெல்லா சிங்குக்கு ஆரத்தி எடுத்து வரவேற்கத் தயாராகிறார்கள்!

## ரஞ்சி கோப்பை:

# தமிழ்நாடு தோற்றது ஏன்?



எல். சிவராமகிருஷ்ணன்



பாலு அழகண்ணன்



எஸ். வாசுதேவன்

ரஞ்சி கோப்பையை 1955 — இல் வென்ற தமிழக அணியின் கேப்டன் பாலு அழகண்ணன், தமிழக அணி இவ்வாண்டு ரஞ்சி கோப்பையை இழந்ததற்கு என்ன காரணம் என அலசுகிறார்:

1. தமிழக அணிக்காக வழக்கமாய் விளையாடும் சிறந்த வீரர்களான ஸ்ரீகாந்த், வெங்கட்ரமணா, ராபின்சிங் மூன்று பேருமே தமிழ்நாட்டுக்காக ஆட முடியாமல் போன துரதிர்ஷ்டம், தோல்விக்கு மிக முக்கிய காரணம்.

2. நம் தோல்வி கூட, மிக மோசமான முறையில் ஆடியதால் ஏற்பட்டதல்ல. முதல் இன்னிங்ஸில் கிடைத்த லீடை வைத்து முடிவு செய்ததில், குறைந்த வித்தியாசத்தில்தான் . தோல்வியுற்றோம்.

3. கல்கத்தா போய், மே. வங்க அணியுடன் நாம் விளையாடினோம். அவர்களுக்கு ஹோம் கிரவுண்டு. இதுவும் ஒரு காரணம்.

4. முந்நூற்றைம்பது ரன்கள் எடுக்கும் வரை இரண்டே விக்கெட்டுகளை இழந்திருந்த தமிழ்நாடு அணி, அதன்பின், விக்கெட்களை மடமடவென இழந்ததும் ஒரு காரணம்.

5. கல்கத்தாவின், தட்பவெப்ப நிலையும் ஒரு காரணம். காற்று மண்டலத்தின் அதிகமான ஈரப்பதம் வங்க அணியின் வேகப் பந்து வீச்சாளர்களுக்குச் சாதகமாய் அமைந்தது.

6. கேப்டன்ஸியைப் பொறுத்தவரை, ஸ்ரீகாந்த்துக்கு இருக்கும் முதிர்ச்சி எல். சிவராமகிருஷ்ணனுக்கு இல்லாமல் போய்விட்டது என்பதையும் குறிப்பிட்டே ஆகவேண்டும்.

இவ்வாண்டு தமிழக அணியின் கேப்டன் எல். சிவராமகிருஷ்ணனின் கருத்தைக் கேட்க, அவரைச் சந்தித்த போது, "நான் ரொம்ப பிஸி! என்ன வேண்டும்?" என்று கேட்டார். ரஞ்சி கோப்பை தோல்வி பற்றிப் பேச வேண்டும் என்றதும், சலிப்புடன், "ஒவ்வொருவரும் இதே கேள்வியைக் கேட்கிறார்கள். கேட்டுக்கேட்டு அலுத்துவிட்டது. எனக்கு எரிச்சல்தான் வருகிறது" என்று சொல்லி விட்டார்.

சென்ற ஆண்டு, ரஞ்சி கோப்பையை வென்ற தமிழக அணிக்குக் கேப்டனாய் இருந்த எஸ். வாசுதேவன் தெரிவித்த கருத்து:

தில்லி அணிக்கு நம் தமிழ்நாட்டு அணி சற்றும் குறைவானதில்லை. இந்த வருடம் வெங்கடரமணாவும், ராபின் சிங்கும் இருந்திருந்தால் நாம் வங்காள அணியைத் தோற்கடித்து, இறுதியாட்டத்தில் தில்லியையும் வென்றிருக்கலாம். சென்றவருடம் ஃபைனலில் ஸ்ரீகாந்த் இடம் பெறாவிட்டாலும், இந்த வருடம் ஸ்ரீகாந்த் ஆடியிருந்தால், நிச்சயம் கோப்பை நமக்குக் கிடைத்திருக்கும் கடைசியாய், வி. சிவராமகிருஷ்ணன் போன்ற சீனியர் ஆட்டக்காரர்களைக் கேப்டனாய்ப் போடாமல், எல். சிவராமகிருஷ்ணனைக் கேப்டனாக்கியது சரியில்லை. மற்ற ஆட்டக்காரர்களுடன் கோ—ஆர்டினேட் செய்து, தலைமைவகித்து, அணியை அழைத்துச் செல்லுவதில் எல். சிவராமகிருஷ்ணனுக்கு அனுபவம் போதாது."

பேட்டி: ஜூலி.

கலந்துரையாடுகிறார்கள்



# பெண்களுக்கு இட ஒதுக்கீடு தேவையா?

**சரஸ்வதி — ரிசர்வ் வங்கி ஊழியை**
**லக்ஷ்மி — தொழில் முனைவர்.**

*சரஸ்வதி:* புதிய தமிழக அரசு, பெண்களுக்காக அரசாங்கப் பணிகளில் முப்பது சதவிகிதம் இட ஒதுக்கீடு செய்துள்ளது. தேர்தல் வாக்குறுதி ஒன்றை உடனடியாக நிறைவேற்றியதற்காக அரசைப் பாராட்ட வேண்டியதுதான். ஆனால் இதனால் மட்டுமே பெண்கள் முன்னேற்றத்துக்கு வழி பிறந்துடும்னு திட்டவட்டமாகச் சொல்ல முடியாது.

*லக்ஷ்மி:* முன்னேற்றத்துக்கான முயற்சியை ஏதோ ஓரிடத்தில் ஆரம்பிச்சுத்தானே ஆகணும். என்னைக் கேட்டால் இந்த இட ஒதுக்கீடு ஒரு நல்ல ஆரம்பம்... நம் நாட்டில், 'பெண் சக்தி வடிவம், மதிப்புக்குரியவள்' என்று ஒரு பக்கம் பேசினாலும் அவரவர் வீட்டிலேயே அநேகம் பேர் பெண்களுக்குச் சமத்துவம் அளிப்பதில்லை. பெண்களுக்கும் அதைப் போராடிப் பெறும் உத்வேகம் இல்லை... இந்த நிலை நீடிக்கிற வரை இட ஒதுக்கீடு நிச்சயம் வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.

*சரஸ்வதி:* சில ஆண்கள் இந்த இட ஒதுக்கீடை எதிர்க்கக்கூடும். பஸ்ஸில் பெண்களுக்குத் தனியா 'சீட்' ஒதுக்கியிருக்கறதையே பல ஆண்கள் சாடறாங்க. 'சமத்துவம் வேணும்ங்கறீங்க... ஆனா பஸ்ஸில் மட்டும் தனியிடமா?' என்கிறாங்க. அப்படியிருக்கும் போது வேலை வாய்ப்பில் சலுகை தரப்பட்டால் இதுபோன்ற ஆண்களின் வெறுப்பு அதிகமாகும்னுதான் நினைக்கிறேன். ஏற்கெனவே பல பேர் 'பெண் வந்து நின்றாலே வேலை கொடுத்துடுவாங்க' என்று குற்றம் சாட்டறாங்க. அது சில இடங்களில் உண்மையாகவும் இருக்கலாம்... மேலும், சில வேலைகளைப் பெண்கள்தான் செய்யணும்னும் சில ஆண்களுக்கே உரிய வேலைகள்னும் பாகுபாடு வேறு செய்து வைச்சுருக்காங்க...

*லக்ஷ்மி:* இந்த இட ஒதுக்கீடினால் அந்த மாதிரி பாகுபாடுகள் குறைந்து, சமத்துவம் அதிகரிக்கும்னு நீங்க நினைக்கிறீங்களா?

*சரஸ்வதி:* அப்படி எனக்குத் தோன்றவில்லை. மாறாக, புதிய சமூகப் பிரச்னைகள் உருவாக வாய்ப்பிருக்குன்னுதான் நினைக்கிறேன். உதாரணமாக, ஒரே படிப்பைப் படித்த இரண்டு பேரில் ஒருத்தருக்கு, அவர் பெண் என்பதால் மட்டுமே வேலை கிடைத்தால் எல்லா ஆண்களும் அதை

முணுமுணுக்காமல் ஏற்றுக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்க முடியுமா?

*லக்ஷ்மி:* 'உத்யோகம் புருஷ லக்ஷணம்'ன்ற பழைய கருத்து இருக்கிற வரைக்கும் நீங்க சொல்ற சமூகப் பிரச்னையோ குடும்பப் பிரச்னையோ உருவாகிற வாய்ப்பு இருக்கு. ஆனால் இந்த் இட ஒதுக்கீடே வேண்டாம்னு சொல்றதுக்கு அது ஒரு வலுவான காரணம்னு நான் நினைக்கலை.

*சரஸ்வதி:* சரி, இட ஒதுக்கீட்டினால் பெண்களின் வேலையில்லாப் பிரச்னை தீர்ந்து, முன்னேற்றத்துக்கு வழி பிறந்துடுமான்னு பார்ப்போம்... அரசாங்க உத்யோகம் போன்ற ஓரளவு கல்வியறிவு தேவைப்படுகிற பணிகளுக்கு முயற்சி செய்யும் பெண்கள் சுமார் 0.22 சதவிகிதம் பேர் தான்! இவர்கள் தவிர ஏராளமான பெண்கள் படித்து விட்டு எந்தவிதமான வேலைக்கும் போகாமல் இருக்கிறார்கள். ஒரு சிலருக்கு வேலை உத்தரவாதம் செய்யறதால் பெண் இனம் முழுதும் முன்னேறிடாது.

*லக்ஷ்மி:* குறைந்தபட்சம் வெறும் 'கல்யாணப் படிப்பு' என்கிற எண்ணம் மாறும் இல்லையா...? வேலை கிடைக்கறதுக்கு அதிக வாய்ப்பு இப்போ இருக்கு என்பதாலே படிச்ச பெண்களுள் இன்னும் அதிகம் பேர் வேலை செய்ய முன் வரலாம். இவங்களுக்குச் சமூக அங்கீகாரமும் அந்தஸ்தும் கிடைக்கும். உழைக்கும் மகளிரின் எண்ணிக்கை அதிகமாகும்.

*சரஸ்வதி:* நீங்கள் உழைக்கும் மகளிர்னு யாரைச் சொல்றீங்க...? உழைக்கும் பெண்களில் எண்பது சதவிகிதத்துக்கும் அதிகமானவங்க கிராமங்களில் விவசாயம், பீடி சுற்றுதல் போன்ற தொழில்களைச் செய்யற அமைப்பு சாரா உழைப்பாளர்கள்தான்.



• லக்ஷ்மி

பெரும்பான்மையினரான இவங்களுக்கு வேலை உத்தரவாதமில்லை. இவங்களை எல்லாம் உள்ளடக்குகிற அர்த்தமுள்ள, முழுமையான, முன்னேற்றத் திட்டம் உருவானால்தானே நல்லது...

*லக்ஷ்மி:* அப்ப நாமே ஒரு நல்ல மாற்று யோசனையை அரசாங்கத்துக்குச் சொல்லலாமே...

*சரஸ்வதி:* கம்ப்யூட்டர் யுகத்துல, இருக்கிற வேலை வாய்ப்புகளும் குறைஞ்சுக்கிட்டே வருது. எனவே அரசாங்கம் நிறைய வேலை வாய்ப்புக்களை உருவாக்கணும். புதுத் திட்டங்கள் வகுக்கணும். பெண்கள் கல்வி விஷயத்தில் நிறைய கவனம் செலுத்தணும். பெண்களுக்குத் தொழில் கல்வி வசதி ரொம்பக் குறைவு. தமிழ் நாட்டில் இருக்கிற 135 பாலிடெக்னிக்குகளில் ஏழு தான் பெண்கள் பாலிடெக்னிக்குகள். அவற்றிலும் அப்பளம், ஊறுகாய் தயாரிப்பது போன்ற பயிற்சிக்குத்தான் அதிக முக்கியத்துவம்...

*லக்ஷ்மி:* பெண்களே இந்தத் தொழில்களைத் தானே விரும்பிப் படிக்கிறாங்க...?

*சரஸ்வதி:* ஒரு சிலர் இஞ்சினியரிங் போன்ற பயிற்சிகளில் சேர முன்வந்தாலும் அந்தச் சிலருக்காக வகுப்புகள் நடத்துவது சாத்தியமில்லை என்கிறார்கள். அதனால் ஆசைப்படுபவர்கள் கூட படிக்க முடிவதில்லை. ஆனால் இந்தக் கல்வி வசதிகளையெல்லாம் பெருக்கணும்னா அரசாங்கத்துக்கு நிறையச் செலவாகும்... மேலும், ஏற்கெனவே உழைக்கும் பெண்களுக்கே போதுமான வசதிகள் இல்லை. காப்பகங்கள் இல்லை. பேறுகால நலங்கள் சரியாக வழங்கறதில்லை...

*லக்ஷ்மி:* நாம் வலுவா குரல் கொடுத்தா இந்தத் தேவைகள் நிறைவேறும். இப்போ முப்பது சதவிகிதம் இடம் நமக்கு ஒதுக்கியிருக்கறதால நம்ம குரலும் கொஞ்சம் ஓங்கி ஒலிக்கும். இந்தத் தருணத்தை மகளிர் நல அமைப்புகள் பயன்படுத்திக் கொண்டு வேலைக்குப் போகும் பெண்களுடன் கை கோர்த்துக் கொண்டால் பல நீண்ட நாள்



• சரஸ்வதி

குறைகளைத் தீர்த்துக்கலாம்.

சரஸ்வதி: இருக்கிற உரிமைகளையே ஏற்கெனவே அரசாங்கம் பறித்துவிட்டிருக்கிறது! மூன்றாவது குழந்தை பெற்றால் பேறுகால நலன்கள் வழங்குவதில்லை — குடும்பக் கட்டுப்பாடு கருதி இந்த ஏற்பாடு! ஆனால் இரண்டு பெண்களைப் பெற்றவர்கள் பிள்ளை வேண்டும்னு மூன்றாவது பெற்றுக்கறாங்க...

லக்ஷ்மி: பெண்களுக்கு வேலை வாய்ப்பு ஓரளவு உத்தரவாதமாயிடுவதால பெண் குழந்தைகளைக் கூட சமூகம் வரவேற்க ஆரம்பிக்குமே...

சரஸ்வதி: இப்போது பிறக்கும் குழந்தை இருபது வருடங்கள் கழித்து எப்படிப் பயனடையும்னு யாருக்குத் தெரியும்! தற்போதைய கல்யாணச் சந்தையில் வேண்டுமானால் பெண்களின் மதிப்பு உயர்ந்துள்ளதாகப் பிற்போக்குவாதிகள் நினைத்து மகிழலாம்— அவ்வளவுதான்!

லக்ஷ்மி: உங்கள் வாதத்தின்படியே பார்த்தால் கூட பெண்கள் ஒடுக்கப்பட்டவர்கள் தான். அவர்கள் முன்னேற இந்தச் சலுகை— இட ஒதுக்கீடு — தேவைதான்.

சரஸ்வதி: பெண்கள் ஒடுக்கப்படுவதை நான் மறுக்கலை... தற்போதுள்ள சமுதாய அமைப்பில் சில்லறைச் சலுகைகள் அளிப்பதன் மூலமாக மட்டும் பெண்கள் முன்னேற முடியாது என்கிறதுதான் என் கருத்து. பெண்களைத் தனியாக வெளியூரில் வேலைக்கு அனுப்பக் குடும்பத்தினர் தயாராயில்லை. பெண்களிலேயே பெரும்பாலோர் வெளியூர் போய் வேலை பார்க்கத் தயாராயில்லை. அப்படியே அவர்கள் போனாலும் விடுதி வசதி போன்றவை எல்லா இடங்களிலும் கிடையாது...

லக்ஷ்மி: குறுக்கிடுவதற்கு மன்னியுங்கள். எனக்குத் தெரிந்த ஒரு பெண் உதம்பூரில் கணவனை விட்டு விட்டுக் கைக் குழந்தையுடன், அஸ்ஸாமில் ஒரு குக்கிராமத்துக்கு வந்து, மூன்று வருடங்கள் தங்கி வேலை பார்த்தார்.

சரஸ்வதி: நல்ல உதாரணம். ஆனால் எல்லாருக்கும் அந்தத் தைரியம் வருவதில்லை. துணிச்சலோடு ஒரு பெண் இருந்தால் அதை சமூகமே அவ்வளவாக வரவேற்கறதில்லை! அப்படி இருக்கிற இன்றையச் சூழ்நிலை... அவளுக்குப் பாதுகாப்பானதுமில்லை... இந்த நிலைமையெல்லாம் மாறணும்னா அடிப்படையான சமூக மாற்றங்கள் வரணும்... ஆண் — பெண் இருபாலருமே முன்னேறணும். வறுமை, வேலையில்லாப் பிரச்னை போன்றவை தீரணும். வறுமையை ஒழிக்கும் அடிப்படையில் அரசாங்கத் திட்டங்கள் அமையணும். இப்படி ஒட்டு மொத்தமான முன்னேற்றங்கள் நாட்டில் ஏற்பட்டால் பெண்களுடைய நிலையும் தானாகவே உயரும்.

உரையாடல் தொகுப்பு: **சீதா ரவி**

அட்டை வண்ணப்படமும், புகைப்படங்களும்: **யோகா**



# கல்கி

1989 ஏப்ரல் 9
மலர் 47 இதழ் 36
விபவ பங்குனி 27



## தி. மு. க. ஆட்சிக்குத் தலைகுனிவு!

'தி. மு. க. ஆட்சியில் ஏற்பட்டுள்ள முதல் தடுமாற்றம் இது; இதுவே கடைசியாகவும் இருக்கட்டும்' என்று சென்ற வாரம் தலையங்கம் எழுதி முடித்து, அந்த இதழ் வாசகர்களின் கரங்களை அடைவதற்கு முன்பாகவே அடுத்த தடுமாற்றமல்ல, தலைகுனிவே ஏற்பட்டுவிட்டது தி. மு. க. ஆட்சிக்கு! வேதனையை அதிகரிப்பது என்னவெனில், இந்தத் தலைகுனிவு முற்றிலும் தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய ஒன்று என்பதுதான்.

பட்ஜெட் உரை நிகழ்த்தப்படுகிற அன்றும் ஆளுனர் உரை படிக்கப்படுகிற அன்றும் உரிமைப் பிரச்னை, ஒத்தி வைப்புத் தீர்மானம் போன்ற எதையும் கொண்டு வரக் கூடாது என்பது மரபு. அ. தி. மு. க. வினர் மரபை மீறினார்கள். சபாநாயகரும், "பிரச்னையை நான் தள்ளவில்லை; இன்று பட்ஜெட் சமர்ப்பிக்கப்படவிருப்பதால் திங்கட்கிழமை அதனை விவாதத்துக்கு எடுத்துக் கொள்வோம்" என்றுதான் கூறினார். இந்தத் தீர்ப்பு, எதிர்க்கட்சிகளுக்குப் பிடிக்கவில்லையெனில் அவர்கள் வெளிநடப்புச் செய்திருக்கலாம். ஆனால் அ. தி. மு. க. எம். எல். ஏக்கள் இந்தக் கௌரவமான வழியை விட்டுவிட்டு வன்முறையில் இறங்கி, பட்ஜெட்டைப் படிக்க விடாமல் முதல்வரையே தாக்கினார்கள்! இந்த ஆரம்பம், பின்னால் பல அசம்பாவிதங்களுக்கும் வழிவகுத்து விட்டது என்பது ஒருபக்கமிருக்க, அ. தி. மு. க. வினர் சட்டசபையில் அமளிதுமளி கிளப்புவது என்று திட்டமிட்டே அன்று வந்திருந்தனர் என்பது தெளிவு. இதைவிட முக்கியம் என்னவெனில், இதனை முதல்வர் எதிர்பார்த்திருக்கிறார் என்பதுதான். எனவே, தமது கட்சி அங்கத்தினர்களையும் அமைச்சர்









களையும் முதல் நாளே எச்சரித்தும் இருக்கிறார். 'அவர்கள் அநாகரிகமாக நடந்து கொண்டாலும் நாம் கண்ணியம் காப்போம்; பொறுமையாக இருப்போம்' என்றெல்லாம் கூறியும் இருக்கிறார். ஆனபோதிலும், தி. மு. க. அங்கத்தினர்கள், தங்கள் தலைவர் தாக்கப்படுவதைக் கண்டதும் உணர்ச்சிவசப்பட்டுத் தாறுமாறாக நடந்து கொள்ள ஆரம்பித்து விட்டனர். அடிதடி; 'கல்' லெறி தொடர்ந்து, துச்சாதனத் தனத்தில் போய் முடிந்திருக்கிறது. சிலர் மருத்துவமனைக்கே சிகிச்சைக்காகச் செல்லவும் நேர்ந்திருக்கிறது.

தி. மு. க. அங்கத்தினர்கள் மட்டும் தங்கள் தலைவரைச் சூழ நின்று, ''எங்களை எவ்வளவு வேணுமானாலும் தாக்கி அடியுங்கள்; ஆனால் திருப்பித் தாக்க மாட்டோம்'' என்று காந்திய மார்க்கத்தைக் கடைப்பிடித்துக் கூறியிருந்தால் அவர்கள் பெருமை வானளாவ உயர்ந்திருக்கும். அ. தி. மு. க. வின் கௌரவம் அதளபாதாளத்துக்குச் சரிந்திருக்கும்.

ஆனால் தானைத் தலைவர் எச்சரித்திருந்தும் கூடத் தளபதிகள் தாறுமாறாக நடந்து கொண்டு, அவருக்கும் கட்சிக்கும் தலைகுனிவை ஏற்படுத்தி விட்டனர். ''கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்று திரும்பத் திரும்பப் போதித்தாரே, அவரது சிலை ஒவ்வொன்றின் அடியிலும் இந்த வாசகத்தைப் பொறித்து வைத்திருக்கிறீர்களே, அவருக்கு நீங்கள் செய்கிற கைமாறு இதுதானா?'' என்று மக்கள் இன்று கேட்கிறார்கள். ''ஒரு பெண்ணின் முந்தானையைப் பற்றி இழுக்கத் துணிந்த கரத்தை வெட்டிப் போட்டால் என்ன?'' என்று தமிழகத்தில் உள்ள லட்சோபலட்சம் பெண்மணிகள் இன்று வினவுகிறார்கள்.

சட்டசபையில் நடந்த கைகலப்பின் பின் விளைவாக அதற்கு வெளியே, எத்தனை பிரச்னைகள்! தனியார் சொத்துக்களுக்கும் பொதுச் சொத்துக்களுக்கும் எத்தனை சேதாரங்கள்! மக்களுக்குத்தான் எத்தனை கஷ்ட நஷ்டங்கள்!

'தி. மு. க. ஆட்சியை டிஸ்மிஸ் செய்ய வேண்டும்,' 'நாடாளுமன்றத்தில் பிரச்னை விவாதிக்கப்பட வேண்டும்,' 'கருணாநிதி மீது விசாரணை நடத்தக் கமிஷன் நியமிக்க வேண்டும்' என்பன போன்ற கோஷங்கள் அர்த்தமற்ற அபத்தங்கள். இவை எதுவுமே நடக்கக் கூடியன அல்ல. ஆனால் தி. மு. க. வுக்கு ஒரு தீராக் களங்கம் ஏற்பட்டு விட்டது என்னவோ மறுக்க முடியாத உண்மை.

''வெட்கப்படுகிறேன், வேதனைப்படுகிறேன், தலைகுனிகிறேன்,'' என்கிறார் கருணாநிதி. அவர் தலை மீண்டும் நிமிர ஒரே வழி, துரைமுருகனின் ராஜினாமாவை அவர் கோருவதுதான்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# தாக பாரம்



## எடை தூக்குபவருக்கும் லிம்கா
## எடை மிகுந்தவருக்கும் லிம்கா

நீங்கள், எடை தூக்கி தூக்கி, அல்லது உங்கள் எடையை சுமந்து சுமந்து களைத்து தாகத்தால் தவிக்கும் பொழுது... ஐஸோடானிக் ஸால்ட் அடங்கிய கிருமிகள் அற்ற லிம்கா அருந்தி தாகத்தை தணிப்பீர்.




எலுமிச்சை நீர்போன்ற சுவையான பானம்
குளிர்வித்துக் கொடுக்கவும்.




ARTIFICIALLY FLAVOURED. CONTAINS NO FRUIT JUICE OR FRUIT PULP



"டேய், ஸாரநாத்! தெரியலே என்னை? ராம்சாமி... தெரியலே?"

ஒரு கணம் அவன் என்னைப் பார்த்துத் திகைத்தாற் போலிருந்தது. "ராம்சாமி...ம்ம்... நீ வந்து..." என்று அவன் தயங்கு முன், "என்னடா நீ... ஸிக்ஸ்டி பாட்ச், மறந்து போச்சா?" என்று நான் கடிந்து கொள்ள... சமாளித்துக் கொண்டு புன்னகை செய்தான்.

"அஃப்கோர்ஸ் நாட். நீ எங்கே இங்கே வந்தே? எப்ப வந்தே?" அமெரிக்கன் உச்சரிப்பில் வழவழ கொழ கொழ என்று தமிழ் விசித்திரமாக ஒலித்ததே தவிர, உருவம் அப்படியே... அப்படியே இருந்தது.

"பாவி! நீ எப்படிடா அப்படியே இருக்கே! சே! ஒரு மயிர் நரைக்காது! ஒரு தொப்பை விழாது! என்ன அதிசயண்டா பிசாசே! அப்படியே இருக்கியே!" நான் மாய்ந்து போய் விட்டேன்.

சுருட்டை சுருட்டையாக நெற்றியில் வந்து விழும் தலைமயிர்க் கற்றையும் லேசாகக் குழி விழும் கன்னமும், குறும்பும் சிரிப்புமாக ஜொலிக்கும் கண்களும், ஸ்போர்ட்ஸ்மேன் போன்ற உயரமும் உடல் வாகும்... சே... முப்பது வருடங்களுக்கு முன் வந்த மன்மத ரூபத்திலேலேயே இன்றுமா

# கறுப்பு ரோஜா

காட்சி தருவது? ஒரு நெல்மணி அளவு பொறாமை கூட உள்ளே உறுத்தியது.

என் அறைக் கதவைத் திறந்து அவனை உள்ளே அழைத்தேன். மேலும் கீழும் பார்த்த வாறு ஒற்றை சோபாவில் பக்கவாட்டில் காலை நீட்டியவாறு அமர்ந்தான்.

''நீ ஏண்டா இப்படி ஆயிட்டே?'' என்னைப் பார்த்துச் சிரித்தான்.

வாஸ்தவம்தான். ஏன் கேட்க மாட்டான். நெற்றி உச்சி மண்டை வரை விசாலமாக மழுமழுத்தது. பின்னால் வழுக்கை ராக் கொடி... என்னைப் பார்த்தால் அவனுடைய வகுப்புத் தோழன் என்றா சொல்ல முடியும்? கிழம். சரியான கிழம்.

''போட்டோவுக்கும் உனக்கும் சம்பந்தமே இல்லேடா,'' நினைத்து நினைத்துச் சிரித்தான்.

''போட்டோவா?'' புரியவில்லை எனக்கு.

''நம்ப காலேஜ் குரூப் போட்டோவிலே மேல் வரிசையில் வலது மூலையில நிக்க றியே?'' என்று விளக்கினான்.

''அடேயப்பா. அந்த போட்டோவை இன்னுமா வெச்சிருக்கே? என் காப்பி எந்த மூலையில் கிடக்கோ?'' திடீரென்று சந்தேகம் தோன்றியது. ''டேய், உனக்கு இன்னமும் ஞாபகம் வரலே. சமாளிக்கறே. நான் மேல் வரிசையில் எங்கேடா நின்னேன்? கீழ் வரிசையில் இல்லே நட்ட நடுவுல நிக்க றேன்...?''

சற்று யோசனை செய்தான். ''ஆமாம்... ஆமாம்... கரெக்ட்... ஓங்கி வளர்ந்த உத்தமன்களை எல்லாம் பின்னாலே நிக்க வெச்சாங்க. வாமனாவதாரமெல்லாம் மொதல் வரிசை... மறந்து போச்சுடா... சரி எங்கே இங்கே வந்தே? இது என்ன த்ராபை ரூம் எடுத்திருக்கே?''

ஷிகாகோவில் வருடந்தோறும் நடைபெறும் உலக மகா மெஷின் டூல்ஸ் சந்தையில் சரக்கைப் பார்வையிட என் இந்தியக் கம்பெனி இத்தனை வருடங்களில் முதன் முதலாக என்னை அனுப்பியிருந்தது.

டிரேட்ஃபேர் என்று சிகாகோ ஹோட்டல்கள் நிரம்பி வழிந்த நேரம். ஒண்டிக் கொள்ள இடம் கிடைக்காதா என்ற தவிப்பில் ஏழே முக்காலடிச் சதுரத்துக்கு ஒரு நாளைக்கு நூறு டாலர் வாடகை! ஏகப் பிசுக்காரம் பண்ணிக் கொண்டு, ஏற இறங்க முறைத்து விட்டு, ரிசர்வ் பாங்க் எண்ணி எண்ணிக் கொடுத்த சொல்ப அன்னியச் செலாவணியை இப்படி விரயமாக்க எனக்கு மனசாகவே இல்லை.

என் வயிற்றெரிச்சலை எல்லாம் அனுபவித்து ரசித்துக் கேட்டான் ஸாரநாத். ''பேசாமல் வந்து என்னுடன் தங்கி விடு'' என்று உத்தரவிட்டான்.

அதற்குத்தானே காத்துக் கொண்டிருந்தேன். ''இப்போதேவா?''

''இல்லை. இல்லை. எனக்கும் எக்ஸிபிஷனில் சுற்றிப் பார்க்க வேண்டி இருக்கிறது. இரண்டு ஜப்பானியர்களை இந்த ஹோட்டலில் சந்திக்கத்தான் வந்தேன். அவர்களை என் தொழிற்சாலைக்கு அழைத்துச் செல்ல வேண்டும். மாலையில் அவர்களை இங்கே கொண்டு விடும்போது உன்னை அழைத்துப் போகிறேன்'' என்றான் தன் கார்டை நீட்டியவாறே.

எஸ். ஸாரநாத் என்று அச்சிடப்பட்ட கார்டில் அவன் விலாசமும் டெலிபோன் எண்களும்.

''உன் பெற்றோர் எங்கு இருக்கிறார்கள்? உன் மனைவி, குழந்தைகள்...'' என் விசாரணை.

''என் பெற்றோர் என்னுடன் இங்குதான் இருக்கிறார்கள். அப்பாவுக்குப் பாவம் ஆர்த்ரைடிஸ். வெளியே நடமாட முடியவில்லை. வீட்டுக்குள்ளேயே ஊன்றுகோல் தேவை.''

''மனைவி...?''

''நோ. நான் திருமணம் செய்து கொள்ளவில்லை.''

''ஏன் அப்படி?'' வியப்புத்தாங்கவில்லை. இவனைப் பெண்கள் எப்படி விட்டு வைத்தார்கள்? சே, இதில் கூடவா அதிர்ஷ்டம்! என்ன சுதந்திரம்! என்று பெருமூச்சுத்தான் வந்தது எனக்கு.

''நம்ம தினகர், மத்தயாஸ், கிச்சாமி, சங்கரலிங்கம் யாரையாவது பார்த்தியா?'' —பேச்சை மாற்றுகிறான் என்று புரிந்தது.

''ஊஹூம். அவங்கள்லாம் எங்க இருக்காங்கன்னு கூடத் தெரியாது.''

திடீரென்று என்னுள் பொறி தட்டியது. ''டேய், ஒன் ஓல்ட் ஃப்ளேம் என்ன ஆனா? அந்த ப்ளாக் ரோஸ்? மிஸ் டானியல் என்னடா ஆனா?''

என்னை உற்றுப் பார்த்தான். பதில் பேசவில்லை. ''ஓ. கே. சாயந்திரம் பார்ப்போமா?'' அறையை விட்டு வெளியேறிப் போயே விட்டான். போவதற்கு முன் முதுகில் ஒரு பேய் அறை வைத்தானே பார்ப்போம். இதில் கூட அவன் வழக்கம் மாறவில்லை.

ஏதோ மர்மம் இருக்கிறது என்று எனக்கு ஒரு சந்தேகம். ஸாரநாத் வாழ்க்கையில் என்னவோ நடந்திருக்கிறது. இன்னும் ஒரு வாரம் அவனோடு தங்கும் போது தெரியாமலா போய்விடும்?

அவனுடைய இயல்பான குறும்பையும் கலகலப்பையும் தாண்டி உள்ளே ஏதோ சோகம் இருப்பதுபோல் தோன்றியது.

கல்லூரியில் ஐந்து ஆண்டுகளும் அவனே ராஜா. ராகிங் வந்தால் அவன்தான் தலைவன். அழுக்குக் குட்டையில் புது முகங்களை ஞானஸ்நானம் செய்து, எடுப்பதிலிருந்து எல்லா வீரதீர சாகஸங்களுக்கும் அவனே ஹீரோ. ஒன்றிரண்டு பேரைத் தவிர எல்லாப் பேராசிரியர்களையும் கதறடித்

திருக்கிறான்.

சாபத்தையும் மார்க்குகளையும் அள்ளி வீசுவார்கள் வாத்தியார்கள் அவனுக்கு. இந்தப் பழிகாரனுக்கு மண்டையெல்லாம் மூளை. அனாயாசமாக கோல்டு மெடலைத் தட்டிக் கொண்டு போனான்.

எங்கள் வகுப்பில் படித்த..... இல்லை... தெரியாத்தனமாக வந்து மாட்டிக் கொண்ட ஒற்றை மாணவி ரோஸ்.

''கறுப்பில் அழகியடா என் சிங்கி'' என்று மாண்ட் ராகத்தில், அவள் வந்து சேர்ந்த முதல் நாளே பாடி அவளை அழ வைத்தான். அதட்டிய பேராசிரியரிடம் ''குற்றாலக் குறவஞ்சிப் பாட்டு சார்'' என்று பணிவாக விளக்கினான்.

அன்றே சிங்கி, ப்ளாக் ரோஸ் என்ற பட்டப் பெயர்கள் அவளுக்கு முறையாக வழங்கப்பட்டன. அழுகையெல்லாம் ஆரம் பத்தில்தானே தவிர அந்தக் கறுப்பழகி இந்தப் பேயாண்டியைச் சுற்றிச் சுற்றி வந்தது அடுத்த ஐந்தாண்டுத் தொடர்கதை. ஒரு சமயம் சீண்டுவான். அடுத்த கணம் குழை வான். அவளைப் பைத்தியமாக அடித்திருக் கிறான். அந்த நாளில் எங்களுக்குக் கொறிக் கக் கிடைத்த ஒரே வம்பு, ஒரே காதல் கதை இதுதான்.

சொன்னது போலவே வந்து விட்டான் ஸாரநாத். பெட்டி படுக்கையுடன் என்னைக் காரில் அள்ளிப் போட்டுக் கொண்டான். வழவழத்த வெல்வெட் சாலையில் மிதந்து பறந்தது கார்.

''பிரமாதமா இருக்குடா வண்டி'' — பெரு மூச்சு கலந்த என் பாராட்டு.

''பென்ஸ்.''

ஒற்றை வார்த்தையில் உயர்ரகக் காரின் அந்தஸ்து புரிய வைக்கப்பட்டது.

பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தேன். நான் ஏதாவது பான் ஆம் விமானத்தில் ஏறி வழி தெரியாமல் சொர்க்கத்துக்கேதான் வந்து விட்டேனோ என்று தோன்றியது. கூவம் மணக்கும் என் குடியிருப்பு இருக்கும் அதே பூமியில்தான் சிகாகோவும் இருக்கிறது என்பதை ஏற்க மனம் மறுத்தது.

திடீரென்று ஞாபகம் வந்தது. ''ஏண்டா ரோஸ் டானியல் எங்கேடா இருக்கா?'' — நான் விடுவதாக இல்லை.

''ம்...? உனக்கு எதுவுமே தெரியாதா? அவ என்ன ஆனான்னு தெரியாதா?''

''தெரியாது!''

''நான் இங்கே பாஸ்டன் எம். ஐ. டி. யிலே சேர்ந்த மறு வருஷம், அவ என்னை இங்கே தேடி வந்துட்டா.''

''வாட்?''

''கார்னல் யுனிவர்ஸிடியிலேர்ந்து போன் பண்ணினா, ஃபூலிஷ் கர்ல்! என்னை இவ்வளவு தூரம் லவ் பண்ணி இருக்கான்னு நான் நெனைக்கவே இல்லை. நான் ஏதோ விளையாட்டா இருந்தேன்.''

''அப்புறம்?'' — எனக்கு சஸ்பென்ஸ் தாங்கவில்லை.

''ரோஜா திடீரென்று வாடிப் போச்சு. என்ன வியாதின்னே புரியலே. மே பி கான் சர்.''

இருட்டி விட்டதால் அவன் கண்ணீர் விடுகிறானா என்று தெரியவில்லை. குரலில் ஒரு நடுக்கம். கம்மல்.

''த்சு... த்சு... ஐ ஆம் ஸாரி.'' சற்று நேரம் இருவரும் பேசவில்லை.

''நீ என்னைக் கேட்டாயே எப்படி இளமையா இருக்கேன்னு...''

''ஆமாம்.''

''நான் இப்பச் சொல்றதை உன்னால நம்ப முடியாது. ஆனா அது நிஜம்.''

திரும்பி அவனைப் பார்த்தேன். டாஷ் போர்ட் டயல்களின் வெளிச்சம் மங்கல் சிவப்பாக அவன் முகத்தில்.

''ரோஸ் தினமும் தலையிலே ஒரு ரோஜாப் பூவோட வருவாளே ஞாபகம் இருக்கா?''

நன்றாக நினைவு இருந்தது.

''மிஸ், உங்க பெயர் இடுகுறிப் பெயரா, காரணப் பெயரா?'' என்று அவளை அவன் கிண்டல் செய்ததும் நினைவு இருந்தது.

தினம் தவறாமல் சிவப்பு, ஆரஞ்சு, வெள்ளை, மஞ்சள், பிங்க் என்று விதவித மான ரோஜாக்கள் நாளுக்கொன்றாக அவளது பாப் தலையில் காதோரம் எட்டிப் பார்க்கும். வருடா வருடம் மைலேஷஸ் கார்ட னில் நடக்கும் போட்டியில் ரோஜாச் செடிக் கான பரிசு அவள் தந்தை மிஸ்டர் ஆல்ஃப்ரட் டானியலுக்குத்தான்.

''கடைசியா அவளை நான் ஆஸ்பத்திரி யில போய்ப் பார்த்த போது ஒரு கறுப்பூ ரோஜா மொட்டை என்கிட்டக் குடுத்தா...''

''கறுப்பு ரோஜாவா?'' இடைமறித்தேன்.

''ஆமாம். கருஞ்சிவப்பு நிறத்தில் கிட்டத் தட்டக் கறுப்பாவே இதழ்கள் இருக்குமே. ரொம்ப அபூர்வமான ரகம்.'' விளக்கி னான். ''அந்த மொட்டை ஒரு வாஸ்ல வெச்சிருந்தேன். ஒரு நாளாச்சு, ரெண்டு நாளாச்சு, ஒரு மாசமாச்சு அப்படியே இருந் தது. எடுத்து முகர்ந்து பார்த்தா லேசா வாசனை.''



பால்காரர்: இத்தனை வருஷம் பால் வியாபாரம் பண்ணின துல ஒரு வீடு, சின்னதாகத்தான் கட்ட முடிஞ்சுது.

நண்பர்: அப்படின்னா அந்த மாடி வீடு யாருது?

பால்காரர்: அதுவா, அது, பால்ல ஊத்துன தண்ணியை வியா பாரம் பண்ணினதுல கட்டினது!

— ஷைத்தில்.



## கலர் டீ.வி. பரிசு பெற, உடனே எழுதுங்கள்...

இந்த இதழின் 63, 64 பக்கங்களில் சில வாசகர்களின் 'டீ.வி. வீடியோ அனுபவங்கள்' வெளியாகியுள்ளன. அவற்றைப் போலவே, 'குபீர்ச் சிரிப்பை வரவழைக்கும்' அனுபவங்கள் உங்களுக்கு ஏற்பட்டிருந்தால் எழுதி அனுப்புங்கள். டீ. வி. நிகழ்ச்சிகளின் விமர்சனங்களையும் நகைச்சுவை இழைய நீங்கள் எழுதலாம். ரத்தினச் சுருக்கமாய், கல்கியில் அரைப் பக்கத்துக்குள் அடங்கும்படி எழுதி, சமீபத்திய கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் உள்ள தேதிப் பகுதியை மட்டும் (மூன்று வரிகள்) கத்தரித்து இணைத்து அனுப்புங்கள். உறையின் மேல் டீ. வி. வீடியோ பக்கங்கள் என்று குறிப்பிட வேண்டும்.

பிரசுரமாகும் துணுக்கு/விமர்சனம் ரூ. 25/—பரிசு பெறும். தவிர, பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு, ஆறு மாதம் சென்று, குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டீ. வி. பரிசு.

---

"ஒரு மாசத்துக்குப் பிறகா?"

"ஒரு மாசம் என்ன. வருஷம் இருபத்தெட்டாச்சு. இன்னமும் அப்படியே இருக்கு. ப..ரவும் இல்லே. வாடவும் இல்லே."

"வாட் டு யூ மீன்?" அதிர்ந்து போனேன்.

"அவளோட ஆயுளையும் இளமையையும் அந்த ரோஜா மொட்டு மூலமாக என்கிட்டக் கொடுத்துட்டுப் போய்ட்டா. நான் அப்படியே இருக்கேன்."

எனக்குத் தலை சுற்றியது. இது நிஜமா? விளையாடுகிறானா?

"நீ பாரேன். அந்த ரோஜா இன்னமும் வாடலை."

அதற்குப் பிறகு எனக்குப் பேச்சே வரவில்லை. வீட்டை அடைந்ததும் என் இரு சூட்கேஸ்களையும் இரு கைகளில் அனாயாசமாகத் தூக்கிக் கொண்டு நடந்தான்.

என்ன வலிமை! என்ன உரம்! எனக்கு வியப்புத் தாங்கவில்லை.

"அமெரிக்காவுக்கு அம்மியும் உரலும் கொண்டு வந்தியா என்ன? பெட்டியில் என்னடா?" என்ற கிண்டலுடன் உள்ளே அழைத்துப் போனான்.

இளம்பச்சை சோபாவில் நான் அமுங்கித் திளைக்க, "இதோ வரேன்" என்று உள்ளே போனான். பிரமிப்புடன் சுற்று முற்றும் பார்த்தேன். ஓரமாக இருந்த பியானோவுக்கு அருகில் சுவரில் எங்கள் கல்லூரி போட்டோ. பியானோவின் மேல் ஒரு மெல்லிய கண்ணாடிக் குடுவையில் நீளமான காம்புடன்....

ஒற்றைக் கறுப்பு ரோஜா!

இல்லை. ரோஜா மொட்டு. அருகே போய் மெல்லத் தொட்டேன். நிஜம்தான்! பட்டுப் போல் மெத்தென்ற இதழ்கள்! இருபத்தெட்டு வருஷங்களாகியும் வாடாத இளமை ரகசியம்...

"ஹலோ... சாம்பிராணி, டேய் ராமசாமி... எப்டிடா இருக்கே?" அறை விழுந்தது முதுகில். பிசாசு அறை.

ஊன்றுகோலுடன் என் வயதுக் கிழவன் ஒருவன். சுருட்டை மயிர். ஆனால் நரைத்த சுருட்டை. கன்னத்தில் குழி. குழி என்ன? பள்ளமே. சுருக்கங்கள் வேறு.

"நீ.... நீ...." திணறினேன்.

"தினகர், மத்தயாஸ், கிச்சாமி, சங்கரலிங்கம் ஆச்சு. நீ இப்போ அஞ்சாவது. என்னடா சொன்னான் ஸுஹாஸ்? இந்தத் தடவை இளமை ரகசியம் ரோஜாப் பூவா? பலே பலே!"

"ஸுஹாஸ்?" விழித்தேன்.

"ஸாரி அங்க்கிள்," பின்னாலே எட்டிப் பார்த்தான் ஸாரநாத். இல்லை இல்லை. ஸாரநாத்தின் மகன் ஸுஹாஸ் ஸாரநாத்... அதாவது எஸ். ஸாரநாத்.

"இப்படி நடக்கறது அஞ்சாவது தடவை. இதுவரை யாருக்குமே சந்தேகம் வரலே. ரிமார்க்கபிள் இல்லே. ஸாரி ஒன்ஸ்மோர். ஒங்களை வாடா போடான்னு பேசினதை மன்னிக்கணும்."

"ரோஸ்... ரோஸ்...." இன்னும் எனக்குத் திகைப்பு மாறவில்லை.

"கொழந்தை குட்டியோட அவ எங்கியாவது இருப்பா. யாரு கண்டா?" கண்ணைச் சிமிட்டினான் ஸாரநாத்.

"அங்கிள் ஒரு ரிக்வெஸ்ட்..."

"என்னது?"

"இந்தச் சமாசாரத்தை ஊர்ல உங்க கிளாஸ்மேட்ஸ் யார்கிட்டயும் சொல்ல வேண்டாம். அடுத்தாற் போல வரக் கூடிய ஆட்களுக்காக இன்னும் ஆறு கதை ஸ்டாக் இருக்கு."

போர்ச் விளக்கு வெளிச்சத்தில் தெரிந்த தோட்டத்தில் ஒரு ரோஜாப் புதர் கன்னாபின்னாவென்று மொட்டும் பூவுமாகச் சுமந்து கொண்டு குலுங்கியது.

கறுப்பு ரோஜாக்கள்!



கடன் வாங்குவோருக்கு சீட்டுகள் பயன்படுகின்றன என்பது பலருக்குத் தெரியும். ஆனால், முதலீடு செய்வோருக்கும் அவை சிறந்தவை என்பது பலருக்குத் தெரியாது.





**இதோ முழுமையான காட்சி. ஆண்டுக்கு 80 கோடி ரூபாய் பகிர்ந்தளிக்கும் கம்பெனியே சாட்சி.**



# அற்புதம்!

* கடந்த நான்கு வருடங்களாகவே ராஜீவ் அவர்கள் பல தலைவலிகளைத் தானாகத் தேடிக் கொண்டு விட்டார் — தக்கர் கமிஷன் அறிக்கை உட்பட! தலையங்கத்தில் பிரதமரைச் சாடியிருந்தது கரெக்ட்!

கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்.

* சீட்டு கட்டி ஏமாந்த பெண்கள் பற்றிய கட்டுரையைப் படித்தபோது, மிகவும் வேதனையாகவும் வருத்தமாகவும் இருந்தது. குருவி போல் சேர்த்த பணம் போயிற்று. ஏமாறுபவர்கள் இருக்கும் வரையில் ஏமாற்றுபவர்களும் இருக்கத்தான் செய்வார்கள். நாம்தான் முன்னெச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

கரூர் — 2, எம். தனபாலன்.

* மதுரை கிழக்கு — மருங்காபுரி தேர்தல் மர்மம் என்ற தலைப்பில் செம்பியன் செமத்தியாக அசத்தி விட்டாரே! படுதமாஷ்!

திருவாரூர், அ. சம்பத்.

* என்ன செம்பியன் சார்! எப்பவும் ஒரு புது மாதிரியான செய்தியைத் தரும் தாங்கள், இந்த வாரம் மட்டும் நடந்து முடிந்து போன உப்புச் சப்பில்லாத தேர்தல் சமாசாரத்தை எழுதி, நீங்கள் குழம்பியிருப்பது மட்டுமல்லாமல் மற்றவர்களையும் குழப்பி விட்டிருக்கிறீர்களே!''

தக்கோலம், அ. முஸ்தபா.

* இவ்வாரம் 'கல்கி'யின் கவர் ஸ்டோரி, எதிர்க் கட்சிகள் ஒற்றுமை: ஹெக்டேயின் நிலை என்ன? அருமையான பேட்டிக் கட்டுரை. தேசிய முன்னணியின் இன்றைய நிலையையும், அதில் முக்கிய பங்கு வகிக்கும் ஹெக்டேயின் நிலையையும் தெளிவாகவும், விளக்கமாகவும் அறிந்து கொள்ள முடிந்தது.

மதுரை — 9, பிரபாகர் பிரியன்.

* எதிர்க்கட்சிகளின் ஒற்றுமை பற்றிய ஹெக்டேயின் பதில்கள் தெளிவில்லாமல் குழப்பமானதாகவே இருந்தன. எதையோ எதிர்பார்த்த எங்களுக்கு ஏமாற்றமாகவே இருந்தது.

புதுச்சேரி — 12, புதுவை ராஜமுனி.

* 'காங்கிரஸை முறியடிப்பதே புனிதமான பணி' என்று கூறும் ஹெக்டேயின் பேட்டி படிப்பதற்கு நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால், நடைமுறையில் இது எவ்வளவு தூரம் சாத்தியம் என்பது இன்னமும் புரியவில்லை. ஏனென்றால் எதிர்க்கட்சிகளிடையே ஏகப்பட்ட முரண்பாடுகள் உள்ளன'

## வட்டமேஜை

கடந்த ஜனதா ஆட்சியின் போது ஏற்பட்ட விளைவுகளை நினைவில் வைத்துக் கொண்டு ஒற்றுமையாகப் பணியாற்றினால் எதிர்க்கட்சிகளின் எதிர்பார்ப்புகள் நனவாகலாம். பரம்பரை ஆட்சி முறை என்ற பழிச் சொல் இந்திய அரசியலை விட்டு நீங்கும்.

விளாத்திகுளம், பனிமலர்.

* 'ஹெக்டே' பேட்டியில் தெளிவு இருந்தது. எதிர்கால இந்தியாவை வழிநடத்திச் செல்லும் துணிவு தெரிந்தது; எதிர்க்கட்சிகளிடையே ஒற்றுமை ஏற்படும் என்ற உண்மை புரிந்தது; கர்நாடக மக்கள் மேல் அவருக்கு இருக்கும் ஆழ்ந்த நம்பிக்கை எடுத்துக் காட்டப்பட்டது.

சூலூர், எஸ். ஏ. மயில்சாமி.

* குழந்தைக் கவிஞரின் மறைவையொட்டி தாங்கள் வெளியிட்டிருந்த அஞ்சலி, அவர் மேல் அபிமானம் கொண்டுள்ள என்னைப் போன்றோரின் மனத்தைச் சாந்தி செய்தது.

நீடூர், அ. முகம்மது நிஜாமுத்தீன்.

* பம்பாய் துணை போலீஸ் கமிஷனர் சமகோண்டின் பேட்டியில் கடைசி பத்து வரிகளை நமது போலீஸ் இலாகா அவசியம் படித்துத் தெரிந்து கொள்ளணும் சார்...!

செம்பொன்னார் கோவில், எஸ். வி. ஏ. பிரகாஷ்.

* 'கல்கி'யை ஆரம்ப இதழிலிருந்து படித்து வரும் வாசகன் நான். கல்கியில் வரவர சிறுகதைகளில்லாமல் செய்திப் பத்திரிகை மாதிரி சென்று கொண்டிருக்கிறது. 19.3.89 இதழில் ''நாளும் கோளும்'' ஒரு பக்கச் சிறுகதை உள்பட மூன்றே கதைகள்தான். தயவு செய்து சிறுகதைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டுகிறேன்.

கம்பம், ஏ. இராமசாமி.

* ''கணவன் என்கிற ஓர் ஆண் — மனைவி என்கிற ஒரு பெண்ணுக்கு, பூவும் பொட்டும் கொடுக்க மட்டும் ஏற்பட்ட உறவினன் அல்ல. இந்தச் சம்பிரதாய உணர்வை விட, ஒன்றுக்குள் ஒன்றாய்ப் பிணைந்து, இருவரும் ஒரே ஜீவன் என்கிற ஓர் உணர்வுக்குள் — இரு உயிர்களும் இணைவதுதான் — உண்மையான 'கணவன் மனைவி'க்கு அடையாளம்'' என்கிற பார்வையில், சூடாமணி, படைத்திட்ட சிறுகதை 'முகங்கள்' அற்புதம்! பரிமளா படுகிற அவஸ்தைகளையும், அவள் மன ஓட்டங்களையும், இறுதியில் அவள் மனம் பக்குவமடைவதையும், கதாசிரியர் வெகு இயல்பாய், சிறப்பாய் விளக்கியுள்ளார்! பாராட்டுக்கள்!

கொரட்டூர், கே. என். 'ஸ்ரீ' மகுடப்பிரியன்.

* 'தமயந்தி' எழுதிய 'தவிப்புகள்' பற்றி... நாளைக்கு இது பத்திரிகைக்கு அனுப்பிப் பிரசுரமானா, வாசிக்கிற ஒவ்வொரு மனசும் தவிக்கும்' என்ற வரிகளில் படைப்பாளியின் ஜீவ ஆதங்கம் நன்கு வெளிப்பட்டது. எழுதுவது சுயநலத்திற்கா என்ற கேள்விக்கு நெற்றியடி கொடுத்து விட்டார் கதாசிரியர். வெல்டன் தமயந்தி! இதற்கு Contrast ஆக இருந்தது 'கிருஷ்ணா'வின் 'என் தலை எழுத்து'.

தங்கமாபுரிப்பட்டணம், பி. என். ராஜேஷ்.

# கல்கி

வாசகர்களுக்குத் தமிழ்ப் புத்தாண்டுப் பரிசு!



பாரதிராஜா
எழுதும்

# என் உயிர்த் தோழன்

தொடர்கதை அடுத்த இதழில் ஆரம்பமாகிறது!

# பைரவன் ♥ லூசி

லூசியின் எஜமானி செல்வி மதுமிதாவுக்கு,

கடந்த வாரம் நடைபெற்ற நாய் கண்காட்சியில் நடந்த போட்டியில், இரண்டாவது பரிசு பெற்ற பைரவன் நாயின் எஜமானன் எழுதிக் கொண்டது. மிக்க அவசரம். எனக்கல்ல, என் நாய்க்கு. நீங்களும், நானும், வெற்றி பெற்ற நம் நாய்களும் சேர்ந்து எடுத்துக் கொண்ட போட்டோவை ஃபிரேம் போட்டு வைத்திருந்தேன். இரண்டு தினங்களுக்கு முன் திடீரென்று பைரவன் அந்த போட்டோவை எடுத்துப் 'பசக்'குன்னு ஒரு முத்தம் கொடுத்தது. நீங்க அப்படியொண்ணும் ரொம்ப அழகா இல்லையே, இது ஏன் முத்தம் கொடுக்குதுன்னு போட்டோவை எடுத்து நெருக்கத்துலேபார்த்தேன். உங்க நாய் லூசிக்குத்தான் பைரவன் முத்தம் கொடுத்ததுன்னு புரிந்தது. அன்னையிலிருந்து பைரவன், போட்டோவுக்கு முன்னாலே நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு, கண்ணிலேருந்து தாரை தாரையா கண்ணீர் வழிய உக்காந்திடுச்சு. ஊண் இல்லை. உறக்கம் இல்லை. அது படற அவஸ்தையை என்னாலே தாங்க முடியலை. காதல் நோயாலே செத்துடுமோன்னு பயமா இருக்கு! என் பைரவன் உயிர் உங்க கையிலேயும் லூசி கையிலேயும் தாங்க இருக்கு. நம்ம ரெண்டு நாய்களும் சந்திச்சே ஆகணுங்க. இடமும் நேரமும் சொல்லுங்க வரேன். மிக்க அவசரம்.



இப்படிக்கு,<br>
லூசிக்காக ஏங்கும் பைரவன் சார்பில்<br>
சீசர்.

மிக்க அவசரத்துடன் இருக்கும் பைரவனின் (மாடர்னா வேறே பேரு தெரியாதா?) சொந்தக்காரர் சீசருக்கு,

சொந்தக்காரர் என்ற பதத்தைக் கவனிக்கவும். எஜமானன் என்றால் நம் நாய் என்னமோ நமக்கு அடிமை, வேலையாள் என்று ஆகிவிடும். வீட்டிலிருக்கும் நம் உறவினர்களுக்கு நாம் எப்படி எஜமானர் இல்லையோ அதுபோல் நம் செல்லப் பிராணிகளுக்கு நாம் எஜமானர்கள் அல்ல. பிராணிகள் வதை தடுப்புச் சங்கத்தில் மெம்பராக்கும் நான்... நீங்க குறிப்பிட்ட போட்டோ என்னிடமும் இருந்தது. இப்போது காணவில்லை. அதிலிருந்த உங்க முகத்தை மிகச் சிரமப்பட்டும் என் நினைவுக்குக் கொண்டு வர முடியவில்லை. அப்போது என் அறைக்குள் எங்க 'புல் டாக்' வர, சட்டென்று உங்க முகம் நினைவுக்கு வந்துவிட்டது. (இந்த அழகில் என் அழகைப் பற்றிய விமர்சனம் தேவைதானா? ) நம்ம நாய்கள் சந்திக்கணுமா? கனவுகூட காணாதீங்க! ஓர் அந்தஸ்து வேணாம்? என்னோட லூசி, ஃபாரின் ப்ரீட். உங்க நாய் லோக்கல். போட்டியிலே லூசி ஃபர்ஸ்ட். பைரவன் பரிதாப செகண்ட். எங்கப்பாவுக்கு நீங்க கேட்டது தெரிஞ்சுது, உங்களையும் உங்க நாயையும் எங்க வீட்டுலே

இருக்கிற அல்சேஷன்களுக்கு பிரேக்ஃபாஸ்டா போட்டுடுவாரு. ஆமா அது என்ன பேரு சீசர்? நாலு கால்லேயா நடக்கறீங்க?

இப்படிக்கு,
பைரவனுக்காக ஏங்காத லூசியின் சார்பில்
மதுமிதா.

பிரியாணி தம் அடுப்பு சங்க... சய்! என்னமோ சங்க அங்கத்தினர் செல்வி மதுமிதாவுக்கு,

என் பைரவன் வதைபடுவதைத் தடுக்க முன்வர மாட்டீர்களா? என் நாய் என்ன அப்படி அந்தஸ்தில் தாழ்ந்து போய் விட்டது? வேலாண்டிபாளையம் ஜாதிக்கும் திருவல்லிக்கேணி தெரு நாய்க்கும் பிறந்தது என் நாய். உங்கள் நாய் என்ன ஃபாரினில் பிறந்து விமானத்தில் வந்து இறங்கியதா? காபர்மேனுக்கும், வாமோரேனியனுக்கும் பிறந்ததாலே கொம்பா முளைச்சிருக்கு...? எங்கப்பா ஷேக்ஸ்பியர் ரசிகர். அதனாலே எனக்கு சீசர்னு பெயர். நான் தமிழன் என்ற இனமான உணர்வுள்ளவன். அதனாலே என் நாய்க்கு 'பைரவன்'ன்னு பெயர் வைச்சேன். சிவபிரானின் அம்சங்களில் ஒன்று பைரவன். அது சரி, மதுமிதா மட்டும் ரொம்ப மாடர்ன்னு நினைப்பா? மது என்றால் கள். கள் என்றால் ஞமலி என்றும் பொருள்படும். ஞமலி என்றால் நாய். ஆக உங்க பெயரிலேயே நாலு காலையும், மிதா என்று ஒரு வாலையும் வைச்சிருக்கீங்க. போட்டியிலே ஃபர்ஸ்ட் வந்ததுக்குப் பெரிசா அலட்டிக்கிறீங்க? ஜட்ஜுங்க எல்லாம் ஆம்பளைங்க. நீங்களும் பொண்ணு; உங்க லூசியும் பொண்ணு. ஜட்ஜுங்க மயங்கிட்டாங்க..... நீங்களும் மயங்கி என் உயிர்த் தோழன் (பதத்தைக் கவனிங்க) உயிரை வாங்கிடாதீங்க.

இப்படிக்கு,
லூசிக்காகத் தொடர்ந்து ஏங்கும் பைர
வன் சார்பில் சீசர்.

இனமான உணர்வுள்ள திருவாளர் சீசருக்கு,

தோழன் பதம் சூப்பர்! திருவள்ளுவர் கூட ஒரு பாட்டுலே, வாலைக் குழைத்து வரும் நாய்தான் அது மனிதர்க்குத் தோழனடி பாப்பான்னு பாடியிருக்கார். உங்கப்பா ஆங்கில இலக்கியம் படிச்சிருக்கார். நீங்க தமிழ் அகராதியை மேப்பா புரட்டியிருக்கீங்க. உங்க ரெண்டு பேருக்கும் வேறே வேலை இல்லையா? உருப்படியா நாய் வளர்க்கிற வேலையை விட்டுட்டு எதுக்கு இலக்கியம் எல்லாம்? ஒரு வேளை என் மனசு இளகி நம்ம நாய்களைச் சந்திக்கவிட்டாக்கூட, உங்க நாயும் உங்களைப் போல இலக்கியம் பேசி என் நாயை 'போர'டிக்கப் பண்ணிடும் போலிருக்கே? ஜட்ஜுங்க ஒண்ணும் மயங்கலை. உங்க நாய் ஒரு டெஸ்டாவது ஒழுங்கா பண்ணுச்சா? ஒபீடியன்ஸ் டெஸ்ட்லே நீங்க நில்லுன்னா உக்காந்தது, உக்காருன்னா நின்னுது. போஸ் கொடுக்கற டெஸ்ட்லே கோமாளி மாதிரி நின்னுது. இரண்டாவது பரிசு கொடுத்ததே தப்புன்னு சொல்லுவேன். பைரவன்னு ஒரு தடவை வாய் விட்டுச் சொல்லிப் பார்த்தேன். அதைக் கேட்ட என் லூசி ஒரு மாதிரியா சிரிச்சுது. என்னன்னு தெரியலை?

இப்படிக்கு,
பைரவனுக்காக இப்பவும் ஏங்காத
லூசியின் சார்பில் மதுமிதா.

நாசமாப் போற லூசியின் தோழி மதுமிதாவுக்கு,

என் நாயா கோமாளி? ஒரு மாதிரியா சிரிச்சுதுன்னீங்களே உங்க நாய்தான் லூசு. ரொம்பப் பொருத்தமாப் பேர் வைச்சிருக்கீங்க... நீங்க குறிப்பிட்ட பாட்டு



பாரதியாரோடது. திருவள்ளுவரோடது இல்லை. தாடிக்கும் மீசைக்கும் வித்தியாசம் தெரியாத ஜடமே! நீங்க ஒயிலா நடந்து நடந்து உங்க நாயும் கத்துக்குச்சு. இதுலே என்ன பெரிய ஆச்சரியம்னு அதுக்கு முதல் பரிசு? டீ.வி. விளம்பரங்களைக் காட்டி என் நாய்க்கு போஸ் கத்துக் கொடுக்க நினைச்சேன். போஸ்களை விட போஸ் கொடுத்த பெண்கள் சுவாரசியமா தெரிஞ்சதாலே பார்த்துக்கிட்டு அப்படியே உக்காந்துட்டேன். மத்தவங்களைக் கீழ்ப்படிய வைக்கறதுலே பெண்கள் நீங்க காலங்காலமா திறமைசாலிங்க. அதனாலே உங்க நாய் ஒபீடியன்ஸ் டெஸ்ட் நல்லா பண்ணதும் பெரிய விஷயம் இல்லை. நாசமாப் போற உங்க மனசு எப்ப இளகும்?

இப்படிக்கு,<br>ஜூசிக்காக மரணப் படுக்கையில்<br>ஏங்கும் பைரவன் சார்பில்,<br>சீசர்.

நாசமாப் போகாத பைரவன் தோழன் சீசருக்கு,

நீங்க என்னையும் என் நாயையும் அவ்வளவு திட்டியும் உங்களைத் திருப்பித் திட்ட முடியாதபடி ஒரு சூழ்நிலை உருவாயிடுச்சு. ஜூசி சிரிச்ச சிரிப்பு ஜூஸ் சிரிப்பு இல்லை, காதல் சிரிப்பு! அடிக்கடி சோர்ந்து போய், படுக்கையிலே போய்ப் படுத்துக்கிட்டிருந்தது. என்னன்னு போய்ப் பார்த்தப்போ, தலை காணிக்கு அடியிலே காணாப் போன நம்ம போட்டோ கிடைச்சுது. எனக்குச் சட்டுன்னு விஷயம் புரிஞ்சு போச்சு. ஜூசிக்கும் பைரவன் மேலே ஒரு இது.... அது.... அதுதாங்க இது... இதுதாங்க அது.... சீ போங்க எனக்கு எழுதறதுக்கு வெக்கமா இருக்கு. திமர்னு ஜூசி துரும்பா இளைச்சிப் போச்சுங்க. பசலை படர்ந்து, கழுத்து வளையம் கழண்டு விழுந்துடுச்சு. பார்க்கப் பார்க்க எனக்கு அழுகையா வருது. இப்படித்தானே பாவம் நீங்களும் வருத்தப்பட்டிருப்பீங்க. எப்படியாவது நம்ம நாய்களோட காதல் நிறைவேறணும். எங்கப்பாவுக்குக் கோபம் ஏற்படுத்தாத ஏதாவது வழி யோசிங்க.

இப்படிக்கு,<br>உருப்படியான யோசனை எதிர்பார்த்திருக்கும்,<br>மதுமிதா.

வெட்கப்படவும் தெரிந்திருக்கும் மதுமிதாவுக்கு,

நீங்க அனாவசியமா, சம்பந்தமேயில்லாம வெட்கப்பட்டதை, சீ போங்கன்னு கொஞ்சினதை, அடித்தளமா வைச்சிக்கிட்டு ஒரு யோசனை சொல்றேங்க. உருப்படியான யோசனை. நிரந்தரமான ஒரு சூழ்நிலையை நம்ம நாய்களுக்கு ஏற்படுத்திக் கொடுக்க வேணாமா? அதுக்கு நாம ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கணுங்க! அப்போ நீங்க உங்க நாயோட எங்க வீட்டுக்கு வந்துடுவீங்க. நம்ம நாய்கள் நிரந்தரமா ஒண்ணு சேர்ந்துடும். என்ன, நீங்க என் புல்டாக் மூஞ்சியையும், நான், நாய்கூட முத்தம் கொடுக்க விரும்பாத உங்க மூஞ்சியையும் சகிச்சிக்கணும். நம்ம விருப்பு வெறுப்பா முக்கியம்? நம்ம நாய்களோட தெய்வீகக் காதல், காவியக் காதல், ஐந்தறிவுக் காதல் நிறைவேறுவதுதானே முக்கியம்? நான் உங்களைத் திட்டினதெல்லாம் எஸ். எஸ். சந்திரன் பாணி திட்டுக்கள். எதிர்மறையாப் பொருள் கொள்ளணும். சீக்கிரம் பதில் போடுங்க. மிக்க அவசரம். எனக்கில்லை, என் நாய்க்கு.

இப்படிக்கு,<br>மதுமிதாவுக்காக ஏங்கும் சீசர்.

மிக்க அவசரமில்லாமல் ஏங்கிக் கொண்டிருக்கும் சீசருக்கு,

ஊம்! நம்ம தலையெழுத்து இப்படித்தான்னா யார் மாத்த முடியும்? வேறே வழியில்லை. நம்ம நாய்களுக்காக நாம தியாகம் செய்ய வேண்டியதுதான். பைரவன்—ஜூசி காவியக் காதல் இலக்கியமா எழுதப்படும் போது, நம்ம தியாகத்துக்குத் தனியா ஒரு படலம் ஒதுக்கிடுவாங்க. அதைவிட நமக்கு வேறே என்ன பெருமை வேணும்? நாளைக்கே எங்க வீட்டுக்கு வந்து பெண் கேளுங்க. நீங்க வர்றவரைக்கும் புல்டாகையே பார்த்துக்கிட்டிருப்பேன்!

இப்படிக்கு,<br>சீசருக்காக ஏங்கும் மதுமிதா.

---

திருடன் 1: அந்தப் போலீஸ்காரர் உன் கிட்டே பேசிட்டு ஏமாற்றத்தோடு திரும்பிப் போறாரே, என்ன சொன்னே?"

திருடன் 2: 'நான் திருடினது உங்க ஏரியா லிமிட் இல்லே. அதனால் உங்களுக்கு மாமூல் இல்லே'ன்னுட்டேன்!

— கீழை. அ. கதிர்வேல்.



இப்பொழுது

# ஸெரிலாக்®

## நன்மைகள் அடங்கிய காய்கறிகளுடன்






## உங்கள் குழந்தைக்கு ஸெரிலாக் அனுகூலம் அளிக்க இன்னுமோர் வழி




இதோ புதிய ஸெரிலாக் வெஜிடெபிள்–கேரட்டு மற்றும் டொமேட்டோவின் நன்மைகள் நிறைந்தது. இப்பொழுது நீங்கள் குழந்தையின் வளரும் ருசிகேற்ப வெவ்வேறு விதத்தில் அளிக்கலாம்.

ஸெரிலாக் வெஜிடெபிள்லில் எல்லா ஸெரிலாக் அனுகூலங்களும் அடங்கியுள்ளது–ஒவ்வொரு ஊட்டத்திலும் முழுமையான போஷாக்கு. நற்சுவை மற்றும் உடனடி தயாரிக்கும் வசதி ஆகிய எல்லா அனுகூலங்களும் நிறைந்தது.

நான்கு மாதங்களிலிருந்து உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூட திட உணவும் தேவை. இதுவே அவனுக்கு ஸெரிலாக் அனுகூலங்களை புகட்ட உகந்த வேளை. நான்கு மாதங்களிலிருந்து ஸெரிலாக் வீட் கொடுக்க ஆரம்பியுங்கள். ஆறு மாதங்களிலிருந்து புதிய ஸெரிலாக் வெஜிடெபிள் அல்லது ஸெரிலாக் ஆப்பிள் அல்லது ஸெரிலாக் ஆரஞ்சு–உங்கள் விருப்பத்திற்கு ஏற்றபடி கொடுங்கள்.

*சுகாதாரமான முறையில் உணவு தயாரிக்கவும், உங்கள் குழந்தைக்கு சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தவறாது பின்பற்றுங்கள்.*

**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**



* பகுகுணாவுடன் எஸ். எல். கே.



வழி ஏற்பட, என்னைப் பக்கத்தில் வைத்துக் கொண்டுதான் மாலை போட்டார். அப்படித் தொண்டர்களுக்கு மதிப்பளிப்பவர் பகுகுணா.

●● சுற்றுப்பயணம் செய்யும் தலைவர்களிடம் மக்கள் தங்கள் குறைகளைக் கூறுவதும், எழுதித் தருவதும் சகஜம். அப்புறம் அந்த ''பெட்டிஷன்கள்'' என்ன ஆகும் என்று யாருக்கும் தெரியாது! ஆனால் பகுகுணா அப்படியல்ல. ஒரு சமயம் பெங்களூரிலிருந்து ஹோசுகனேகல் வழியாக வந்து கொண்டிருந்த போது பெறப்பட்ட கடிதங்களை, சேலம் வந்தவுடன் அமைச்சர் ராஜாராம் இருக்கிறாரா என்று கேட்டுத் தெரிந்து கொண்டு, அவரை அவர் வீட்டில் நேரில் சந்தித்துக் கொடுத்தார். மக்களின்

# பகுகுணா—பலே குணா!

தேசிய முன்னணியின் பேரணி சென்னையில் நடந்த போது நினைவுச் சின்னமாக பகுகுணாவுக்கு வள்ளுவர் கோட்டம் பொறிக்கப்பட்ட கேடயம் ஒன்றைக் கருணாநிதி பரிசளித்தார். அது இப்போது எங்கே இருக்கிறது தெரியுமா? எஸ். எல். கே. என்று பகுகுணா அன்புடன் அழைத்த எஸ். எல். கிருஷ்ணமூர்த்தியின் வீட்டில் வரவேற்பறையை அலங்கரிக்கிறது. பகுகுணா பரிசுப் பொருள்கள் மீது பற்றுதல் வைக்கவில்லை என்பதை மட்டுமின்றி கிருஷ்ணமூர்த்தியிடம் அவருக்கிருந்த பற்றுதலையும் வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது.

இன்றைய தமிழ்நாடு லோக்தளத்தின் தலைவர் கிருஷ்ணமூர்த்தி, பகுகுணா பற்றி, அவரது சிறப்பியல்புகளைப் படம் பிடித்துக் காட்டுவது போல் பேசுகிறார்:

●● கருணாநிதியின் அறுபதாவது பிறந்த நாள் விழாவின் போது அவரை அவர் இல்லத்தில் சந்திக்கப் பகுகுணாவை அழைத்துப் போனேன். கோபாலபுரத்தில் ஏகக் கூட்டம். வடிகட்டிக் கொண்டிருந்தார்கள். ''நீங்கள் போய் வாழ்த்திவிட்டு வந்து விடுங்கள். தி. மு. க. தொண்டர்கள் உங்களுக்கு வழி ஏற்படுத்தி அழைத்துப் போய் விடுவார்கள்'' என்றேன். ''உனக்கு அனுமதி இல்லையானால் நானும்போகவில்லை; திரும்பி விடுவோம்'' என்றார். அப்போது இருவருக்குமே குறைகளையும் எடுத்துச் சொல்லி, முதல்வருடன் கலந்தாலோசித்து ஆவன செய்யுமாறு வற்புறுத்தி விட்டுத்தான் மேலே பயணத்தைத் தொடர்ந்தார்.

●● தாழ்த்தப்பட்ட மக்களிடையேயும் சிறுபான்மையினரிடமும் பகுகுணாவுக்குப் புகழும் செல்வாக்கும் உண்டு என்பது பலருக்குத் தெரியும். ஆனால் பலருக்குத் தெரியாத விஷயம் பகுகுணா பிராமணர் என்பது! திருவல்லிக்கேணியில் உருது மொழி மாநாட்டில் கலந்து கொண்டு அவர் உருது மொழியிலேயே பேசினார்! வேறு பல உருது அறிஞர்கள் உருதுவில் பேசிய போது கிடைக்காத கைதட்டல் பகுகுணாவுக்குக் கிடைத்தது! அத்தனை பிரமாதமாக உருது மொழியைக் கையாளக் கூடியவர் அவர்.

●● காந்தியக்கொள்கைகளில்மிகுந்தபற்றுதல் கொண்டவர் பகுகுணா. தாம் இருக்கும் ஒரு கட்சி காந்தியத்தைக் கைவிடுவதாகத் தோன்றினால் அவர் அந்தக் கட்சியை விட்டு விட்டுப் போய்விடுவார்! எனவே தடுமாற்றம் பிறரிடம்தானேயொழிய அவர் என்றுமே தமது நிலையில் கொள்கையில் உறுதியாகத்தான் இருந்திருக்கிறார்.

— சாருகேசி

# அன்புப் பின்னல்

நாலு மணி என்று நேரம் சொன்னது கைக்கடிகாரம். வெயிலில் நெருப்பு இல்லை. வெப்பம் இருந்தது.

பஸ்ஸிலிருந்து இறங்கும் போதே காஞ்சனாவின் கையுடன் தன் கையைக் கோத்துக் கொண்டான் பிரதீப். அதை அவன் அழுத்திக் கொடுத்த விதத்தில் அவனுடைய அழுத்தமான எதிர்பார்ப்பு தெரிந்தது.

''தாகமாயிருக்கில்லே?''

— ஆப்பிள், ஆரஞ்சு, தக்காளி, திராட்சை படங்கள் போட்டு ஜூஸ் விலைப் பட்டியல் எழுதிய கடை வாசலில் நின்றான் பிரதீப்.

''ம்'' என்றாள், காஞ்சனா.

''என்ன ஜூஸ்?''

''எது வேணா...''

''ரெண்டு கிரேப் ஜூஸ். கொஞ்சம் ஐஸ் கம்மியா.''

பிரதீப்பின் கண்கள் காஞ்சனாவை ஆவலுடன் விழுங்கின. அவள் முகத்தில் வெயில் பட்டுத் தெறிக்கும் போது, மெல்லிய பலூனை ஊடுருவுவது போல வெளிச்சம் அவள் சருமத்தை ஊடுருவி, ரோஜாக்களை நினைவூட்டியது. அவளுடைய கண்கள் கனவுகளுக்காகவே கட்டி வைத்த மைதானம். வியர்வைத் துளிகளுக்காக நிர்மாணிக்கப் பட்ட உன்னதச் சறுக்குமரம் அவள் மூக்கு. சர்க்கரை கமக்கும் வார்த்தைகளைப் பிரசவிக்கும் ஈர உதடுகள்......

ஜூஸ் குடித்து முடித்தவுடன், ''பிரதீப், ஒரு கால் கிலோ கிரேப்ஸ் வாங்கிப்போமா?'' என்றாள்.

''தியேட்டர்ல சாப்பிடவா காஞ்சனா...?''

''ம்ஹூஹூம்.... கதிர்வேலுவுக்குப் பிடிக்கும்.''

''ஆரம்பிச்சுட்டியா?'' பிரதீப்பின் முகத்தில் மேகம். ''கொஞ்ச நேரம் உன் ஹோமை மறந்துட்டுத்தான் இரேன்.''

''ஸாரி பிரதீப்...'' காஞ்சனா பிரதீப்பின் கையைப் பற்றிக் கொண்டாள். ''போகலாம், வாங்க.''

''இன்னும் முழுசா ரெண்டு மணி நேரம் இருக்கு சினிமாவுக்கு. அப்படியே விண்டோ ஷாப்பிங் பண்ணலாம் வர்றியா?''

''விண்டோ ஷாப்பிங்தானே? ஆஹா... கண்ணாடிக் கேஸ் வழியா பார்த்து வைரநெக்லஸ் விலை பேசலாம். என் உசர வெள்ளிக் குத்து விளக்கு வாங்கலாம். ஒண்ணரையடி அகலத்துக்குச் சரிகை பார்டர் போட்ட காஞ்சிபுரம் பட்டுப் புடைவைல கலர் செலக்ட் பண்ணலாம்.''

''பூப்போட்ட நைட்டில நீ எப்படி இருக்கேன்னு இமாஜின் பண்ணலாம். கட்டம் போட்ட மிடில கணுக்கால் தெரிய...''

''ச்சீ... ஆம்பிளைங்களுக்கு அப்படி, இப்படி அந்த நெனைப்புதான் பெரிசாயிடுது!''

கைகோத்துக் கொண்டு நடந்தார்கள்.

''ஆம்பிளைங்களை மட்டும் தனியாச் சொல்லிடுவீங்களே... உங்களுக்கெல்லாம் அந்த நெனைப்பே கிடையாதா?''

''ஊஹூம். உங்களை நான் பார்த்த போது நீங்க ஒசரமா இருக்கீங்க, கண்ல ஸெக்ஸ் இருக்கு, மீசை கம்பீரமா இருக்கு, ஒடம்பு விண்ணுன்னு ஜோரா இருக்குன்னு பார்க்கலை...''

''அ... அ...''

''ப்ராமிஸ் பிரதீப். நீங்க என்னை மீட் பண்ணிப் பத்திரிகைக்காக இண்டர்வியூ எடுத்தப்ப, என்னைப் பார்த்து உங்க கண்ல ஒரு பிரமிப்பு வந்துதே, அதை ரசிச்சேன். மறுநாளே குழந்தைங்களுக்காக அங்கே இங்கே தேடிப் பழைய சட்டைங்களைக் கொண்டாந்து கொடுத்தீங்களே... அந்த சின்ஸிய ரிட்டி என்னை அசத்திச்சு...''

''நெஜத்தைச் சொல்லட்டுமா? ஒன்னை மறுபடியும் பார்க்கணுங்கறதுக்காக நான் பண்ணின ஐடியா அது.''

சுபா

''ஹப்பா... இந்த ஆம்பிளைங்க இருக்காங்களே... எந்தக் காரியத்தையும் அவங்களுக்குச் சாதகமா திரிச்சிடுவாங்க...''

பிளாட்ஃபாரத்தை ஒட்டி நடந்தார்கள். கரும்புகளை அடுக்கிக் கொண்டு, டீசல் மோட்டாரில் கரும்பைப் பிழியக் காத்திருக்கும் முண்டாசு, பார்க் செய்த காரைச் சட்டைத் துணியால் துடைத்து உடனே காசுக்காகக் கை ஏந்தும் சிறுவர்கள், பிளாஸ்டிக் சாமானில் ஆரம்பித்து, வீட்டு மனைகள் விற்க — வாங்க என்று போர்டு வைத்து ஒற்றை ஸ்டூலில் காத்திருக்கும் அமெச்சூர் ரியல் எஸ்டேட் வரை — நடைபாதைகளை ஆக்கிரமித்திருக்க —

''பிரதீப்...!'' காஞ்சனா அவன் கையைப் பிடித்து 'வெடுக்' என்று இழுத்தாள். ''கே.ஆர்.எஸ். ஜுவெல்லரி — கொஞ்சம் உள்ளே போய்ட்டு வந்துடலாமா?''

''ஏன் கல்யாணத்துக்குத் தாலி, மெட்டி, கொலுசெல்லாம் இப்பவே செலக்ட் பண்ணப் போறியா?''

''வாங்களேன் சொல்றேன். அந்த முதலாளிகிட்டே கொஞ்சம் பேசணும்.''

முதலாளி ஐந்து விரல்களில் மோதிரம் அணிந்து, நெற்றியில் சந்தனம் தரித்து, நாற்காலிக்குள் எப்படியோ பதுங்கியிருந்தார்.

''வாம்மா... உக்காரு... உக்காருங்க சார்.. பொஸ்தகத்துல கூடப் பேட்டி படிச்சேன். நெஜமாவே ஏர்—ஹோஸ்டஸா இருந்துட்டா அனாதை இல்லத்துல வேலைக்குச் சேர்ந்தே?''

''ஆமா சார். தற்செயலா ஒரு விழாவுக்காக அந்த ஹோமுக்குப் போனப்பதான் அந்த நாப்பத்திரண்டு குழந்தைங்களும் அம்மா யாரு, அப்பா யாருன்னு கூடத் தெரியாம, மணியடிச்சா சோறு, பெரிய மனுஷங்க தானம் பண்ணினா ட்ரெஸ்ஸுன்னு இருக்கிறதைப் பாத்தேன்...''

''இத்தனை குழந்தைங்க இங்க கஷ்டப் படறப்ப, நாம பணத்தைப் பத்திக் கவலையே படாதவங்களுக்கு ஃப்ளைட்ல சிரிச்சு, சிரிச்சுப் பணிவிடை பண்றோமேன்னு வெறுத்து அனாதை ஆசிரமத்துலே சேர்ந்துட்டே — படிச்சேன் இண்டர்வ்யூவில...''

''நீங்க ஹோமோட ஆண்டு விழாவுக்கு வந்திருந்தீங்க சார்.''

''தெரியும். தெரியும். நீ இப்ப எதுக்கு என்னைப் பார்க்க வந்திருக்கேன்னு புரியுது. மீட்டிங்குல நான் இருபதாயிரம் ரூபா டொனேஷன் தரேன்னு சொன்னேனே. ஏன் இன்னும் தரலைன்னு கேட்டுட்டு வசூல் பண்ணிட்டுப் போகலாம்னு வந்திருக்கே. கரெக்டா?''

''சில பேர் மேடைல சொல்லுவாங்க. அதோட மறந்துடுவாங்க. நீங்க அப்படி இல்லே. சொன்னதை ஞாபகம் வெச்சிருக்கீங்க.''

''ஐஸ் வெக்காதே. இதோ செக் வெட்டிடறேன். என்ன சாப்பிடறீங்க... சார் யாரு... பையா... கோல்ட் ஸ்பாட் ரெண்டு...''

அவர்கள் மறுப்பதற்குள் அவர் ஆர்டர் செய்து, பையன் ஓடியே போய்விட்டான்.

''இவர்தான் பத்திரிகையில் என்னைப் பத்தி எழுதினவரு...''

''அப்படியா.. ரொம்ப சந்தோஷம். பிரமாதமா எழுதியிருந்தீங்க.''

கோல்ட் ஸ்பாட் குடித்து விட்டு, செக்கை ஹாண்ட் பேகில் போட்டுக் கொண்டு வெளியே வந்தபோது காஞ்சனாவுக்குப் பெருமையாக இருந்தது.

''முடிச்சாச்சா...? அடுத்தது எந்த ஆசாமிகிட்டப் போய்ச் சீட்டுக் கம்பெனியிலேர்ந்து வர்றவ மாதிரி வசூலுக்கு நிக்கப் போறே?''

''ஏன் பிரதீப்? கோவமா எம்மேல?''

''கொஞ்ச நேரம் உன் பாழாப் போன ஹோமை மறந்துட்டுத்தான் வாயேன்.''

''பிரதீப். ப்ளீஸ். அந்த மாதிரி ஸ்ட்ராங்கான வார்த்தையெல்லாம் யூஸ் பண்ணாதீங்க'' அவனைச் சமாதானப்படுத்துவது போல அவன் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அடுத்த கடையில் நுழைந்தாள்.

ரெடிமேட் துணிகள், வாங்குபவர்களை எதிர்நோக்கி, ஹாங்கர்களில் தவம் செய்து கொண்டிருந்தன.

''புது வெரைட்டி டீ ஷர்ட் இவர் சைஸுக்கு எடுத்துப் போடுங்க.''

பிரதீப் ஆட்சேபித்ததை அலட்சியம் செய்து பச்சையும் மஞ்சளும் வரி போட்ட ஒரு டீ ஷர்ட்டை செலக்ட் செய்து முடித்தாள்.

காசு கொடுக்கும் கவுண்ட்டரில் நின்ற போது காஞ்சனா அந்த கவுனைப் பார்த்தாள்.

''ஹை... அந்த கவுன் எடுங்க. பிரதீப், எவ்வளவு அழகா இருக்கில்ல இந்த எம்ப்ராய்டரி ஒர்க். இதை விடக் கொஞ்சம் பெரிய சைஸ் எடுங்க.''

''எத்தனை வயசு பாப்பாங்க?''

''இவளுக்கு எல்லா வயசுலயும் பாப்பா இருக்கு'' என்று பிரதீப் வெடித்தான். ''மூக்கு ஒழுகிக்கிட்டு, மண்ல பொரண்டுகிட்டு, அழுக்கு வெரலைச் சப்பிக்கிட்டு... இந்தக் கவுன் யாருக்கு... காத்தாயிக்கா ராமாயிக்கா?''

கடைக்காரர் அவர்களுடைய சம்பாஷணையின் வேகம் புரியாமல் விழித்தார்.

பிரதீப் அவசரமாகக் கண்ணாடிக் கதவைத் தள்ளி வெளியேறினான். காஞ்சனா கடைசியாக வாங்கிய கவுனைத் திருப்பி விட்டு அவனைப் பின்தொடர்ந்தாள்.

பிளாட்ஃபாரத்தில் இறங்கிக் கொண்டிருந்தவனை நெருங்கி அவன் கையை இழுத்துக் கொண்டாள் — ''ஸாரி பிரதீப்!''

''விவேகானந்தா அனாதை ஆசிரமம் தான் முக்கியம்னா என் கூட சினிமாவுக்கு வர ஏன் ஒத்துக்கிட்டே?''

''ஸாரி... ஸாரி... ஸாரி... ஸாரின்னு சொன்னப்புறமும் கோச்சுக்கக் கூடாது.



• சுந்தரம்

# ஸ்பெஷல் மோசடிகளைக் கண்டு பிடிப்பவர்!

ஒரு பாக்கெட் சிகரெட்டின் விலை ஐந்து ரூபாய் என்றால், அதற்கேற்ப சிகரெட் தயாரிப்பாளர், அரசாங்கத்துக்குச் சுங்கவரி செலுத்த வேண்டும். இதனால் சில தயாரிப்பாளர்கள் அதே ஐந்து ரூபாய் சிகரெட்டின் அட்டைப் பெட்டியில் மிகச் சிறிதாக, பளிச்சென்று கண்ணில் படாத வகையில், 'ஸ்பெஷல்' என்றொரு வார்த்தையைச் சிகரெட்டின் பெயருடன் சேர்த்துவிட்டு, விலையையும் பொடி எழுத்துக்களில் மூன்று ரூபாய் என்று குறிப்பிடுவார்கள். இந்த 'ஸ்பெஷலு'க்கு விளம்பரமே இருக்காது. வாடிக்கையாளர், வழக்கமாக வாங்கும் சிகரெட் பெட்டியில் மாற்றத்தைக் கவனிக்காமல் ஐந்து ரூபாயே கொடுத்து வாங்குகிறார்; சிகரெட் கம்பெனியோ வாடிக்கையாளரை மோசடி செய்வதோடு குறைவான சுங்கவரி செலுத்தி (மூன்று ரூபாய்க்குரியது) அரசாங்கத்தையும் ஏமாற்றும்.

இதே போன்ற நுணுக்கமான முறைகளில், சுங்கவரி ஏய்ப்பை, பெரிய, பெரிய துணி மில்கள் துவங்கி, கண்ணாடி பாட்டில்கள் தயாரிக்கும் சிறிய தொழிற்சாலைகள் வரை பல தொழிலகங்கள் செய்து வருகின்றன. இதற்காகவே 'நெளிவு சுளிவு' அறிந்த பல 'நிபுணர்களி'ன் அறிவைப் பயன்படுத்திக் கொள்கின்றன இந்நிறுவனங்கள்.

— இத்தகைய சுங்கவரி ஏய்ப்பைக் கண்டுபிடிக்கவென்று அரசாங்கத்தில் ஓர் இலாகாவே இயங்கி வருகிறது. இந்த இலாகாவின் பம்பாய் மண்டலப் பிரிவைச் சேர்ந்த மூத்த துப்பறியும் அதிகாரி சுந்தரம். இதுவரை சுமார் 1300 கோடி ரூபாய் சுங்கவரி ஏய்ப்பை இவர் கண்டுபிடித்துள்ளதைப் பாராட்டி, இவ்வாண்டின் ஜனாதிபதி விருது இவருக்கு வழங்கப்பட்டுள்ளது. கடந்த மூன்று ஆண்டுகளாக மட்டுமே வழங்கப்பட்டு வரும் இவ்விருதினைப் பெறும் முதல் தமிழர் சுந்தரம்.

— லக்ஷ்மி கண்ணன்.

கமான்.''

'டியர் பிரதீப்,

இன்று மாலை உங்களுடன் சினிமாவிற்குப் போய் வந்தது எனக்குள் நிறைய விஷயங்களைத் தெளிவுபடுத்தி விட்டது. போதி மரத்தடிக்குப் போய் மீண்ட மாதிரி இருக்கிறது.

எனக்கு அப்பா இல்லை. அம்மாவும் ஆஸ்பத்திரியில். இந்த நிலையில் என் மனத்தை இழுத்துப் பிடித்து விட்டது விவேகானந்தா ஆசிரமம். ஆரம்பத்தில் ஒரு விளையாட்டுக்காகத்தான், ஒருவித த்ரில்லுக்காகத்தான் ஹோம் குழந்தைகளுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் அவர்களோடு செலவழித்த நாட்களில் அன்புக்காக, கவனிப்பிற்காக அவர்கள் எவ்வளவு ஏங்கியிருக்கிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டேன்.

நந்தகோபாலோ, ராமசுப்புவோ, கதிர்வேலோ, சுந்தரியோ, ராமாத்தாளோ தனித்தனியே அனாதைக் குழந்தைகள்தான். ஆனால் விவேகானந்தா ஆசிரமத்தில் அவர்கள் சகோதர சகோதரிகள். அவர்களுக்கு ஆசிரமம்தான் குடும்பம். இன்றைய தேதியில் நான்தான் எல்லோருக்கும் அக்கா. அவர்களை எல்லாம் என் நினைவிலிருந்து சுழற்ற முடியுமா... நோ சான்ஸ்.

இன்றைக்கு நான் எவ்வளவோ கட்டுப்பாடுடன் இருக்க முயன்றும் கூட, தியேட்டரில் ஐஸ்க்ரீம் சாப்பிட்ட போது நந்தகோபால் நினைவுக்கு வந்து விட்டான். பாப்கார்ன் பாக்கெட்டை இருட்டில் கிழித்த போது, ராமசுப்பு கையேந்தி நிற்பது போல் இருந்தது.

ஸாரி பிரதீப். மூச்சுக்கு மூச்சு அவர்கள் என்னைத் துரத்திக் கொண்டிருக்கிறார்கள். துரத்திக் கொண்டிருப்பார்கள்.

உங்களுக்கு இந்தக் காஞ்சனா இல்லாவிட்டால் இன்னொரு காஞ்சனா கிடைக்கலாம். இந்த நாற்பத்திரண்டு குழந்தைகளுக்கு?

நீங்கள் என் மீது காட்டிய அக்கறைக்கு, என் மேல் பொழிந்த அன்பிற்கு, அனுபவித்த சில சந்தோஷ கணங்களுக்கு — நன்றிகள்.

இனி விவேகானந்தா ஆசிரமம் வரும் போது 'காஞ்சனாக்கா'வைப் பார்க்க மட்டும் வாருங்கள். 'காஞ்சனா டார்லிங்'கைத் தேடி வர வேண்டாம்.

அன்புடன்,
காஞ்சனா.

எழுதி முடித்துக் கவரை ஒட்டினாள் காஞ்சனா. மேஜை விளக்கை நிறுத்தினாள்.

ஹாலுக்கு வந்தாள். குழந்தைகள் வெவ்வேறு போஸ்களில் வெவ்வேறு கனவுகளில் புரண்டிருந்தார்கள்.

ஹாலின் மையத்தில் பனைப் பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள் — நிம்மதியாக.

# சாலிடெர் தரம்

Solidaire

சர்வதேசப் புகழ் பெறுகிறது



சாலிடெர் CAT 1000DX... இப்போது யூகோஸ்லாவியாவுக்கு (கிழக்கு ஐரோப்பா) ஏற்றுமதி செய்வதற்கான மதிப்புமிக்க ஆர்டரைப் பெற்றுள்ளது. ஏற்றுமதிக்கு இது ஓர் ஆரம்பமே... இன்னும் பலப்பல ஏற்றுமதி ஆர்டர்கள் வர இருக்கின்றன.

சாலிடெர் CAT 1000 DX — இந்தியாவில் பெரிதும் விரும்பி வாங்கப்படும் டீலக்ஸ் கலர் டிவி... விரைவில் வெளி நாடுகளிலும் இதன் புகழ் கொடிகட்டிப் பறக்கப்போகிறது.

## சாலிடெர்

Insight-S-180

# காலத்தால் அழியாத ஒரு சில சின்னங்களில் இதுவும் ஒன்று



கெல்வினேட்டர் ரெஃப்ரிஜெரேட்டருக்கு முதுமைக் கோளாறு என்பதே கிடையாது. எத்தனை ஆண்டுகளானாலும் ஒரே மாதிரி திறனுடன் இயங்குகிறது.

இதனுடைய நீடித்த ஆயுளுக்கு 'மின்சாரத்தை மிச்சப்படுத்தும்' கம்ப்ரெஸ்ஸரும் ஒரு காரணம். வெளிப்புறத் தட்ப வெப்பநிலை எதுவாக இருந்தாலும் விரைந்து குளிரச் செய்கிறது; சீக்கிரமே ஐஸ் உண்டாக்குகிறது. வோல்ட்டேஜ் எவ்வளவு கூடினாலும் குறைந்தாலும், இதன் அமைதியான இயக்கம் தடைப்படுவதே இல்லை. மிகக் குறைந்த அளவு மின்சாரத்தையே பயன்படுத்துகிறது.

இன்னுமொரு ஆச்சரியமும் அளிக்கிறது கெல்வினேட்டர். இதனுடைய விசாலமான இடப்பரப்பு, அதிக அளவு இடவசதிக்காக, மூலை முடுக்குகள் இன்றி மிகக்கவனமாக உட்புறம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

வலிமை மிக்கது. எல்லாமே எஃகிலான கட்டுமானமும், திடமான எபிஎஸ் லைனரும் சேர்ந்து, இதன் வெளிப்புறத்துக்கும் உட்புறத்துக்கும் கூடுதல் வலு கொடுக்கின்றன. எனவே நீண்ட காலம் உழைக்கிறது.

மேலும் நீங்கள் தேர்ந்தெடுக்க வசதியாக, கண்ணைக் கவரும் வண்ணங்களில் பற்பல மாடல்கள்.

உங்கள் ஆயுள் காலத்தில் ஒரே ஒரு முறைதானே ரெஃப்ரிஜெரேட்டர் வாங்கப் போகிறீர்கள். அது காலத்தால் அழியாத கெல்வினேட்டராக இருக்கட்டுமே.

விற்பனை செய்து சேவை செய்வோர்:
எக்ஸ்போ மெஷினரி லிமிடெட்
பிரகதி டவர், 26, ராஜேந்திரா ப்ளேஸ்,
நியூ டெல்லி-110 008.






## கெல்வினேட்டர்

ரெஃப்ரிஜெரேட்டர்

"மிகவும் விரைவாக குளிர்பதனப்படுத்துவதில் ஈடு இணையற்றது."

# பொன்னியின் செல்வன்

அமரர்

**கல்கி**

மணியம்

**அத்தியாயம் 34**

## இராவணனுக்கு ஆபத்து!

சுந்தர சோழர் தமது செல்வக் குமாரியைப் பார்த்து, ''குந்தவை! நான் முதன் மந்திரியோடு இராஜ்ய காரியங்களைப் பற்றிக் கொஞ்சம் பேச வேண்டும். நீங்கள் போய் உங்கள் காரியங்களைப் பாருங்கள். போகும் போது **இதையும்** அழைத்துக் கொண்டு போங்கள்! உன் தாயார் மட்டும் இங்கே சிறிது நேரம் இருக்கட்டும்!'' என்றார்.

சக்கரவர்த்தி ''இதையும்'' என்று குறிப்பிட்டது மந்தாகினியைத்தான். அப்படிக் குறிப்பிட்டதிலிருந்து அவள் விஷயத்தில் அவருடைய அருவருப்பு வெளியாயிற்று.

குந்தவை சிறிது ஏமாற்றத்துடன் தந்தையை நோக்கினாள். அதைக் கவனித்த சக்கரவர்த்தி, ''ஆமாம்; இவள் முட்டிக் கொண்டது சிற்ப மண்டபத்திலுள்ள கைலாச மலை தானா என்பதைத் தெரிந்து கொள்வது நல்லது! இவளை அங்கேயே அழைத்துக் கொண்டு போய்க் காட்டித் தெரிந்து கொள்ளுங்கள்! இவள் இங்கே நிற்பதை என்னால் சகிக்க முடியவில்லை!'' என்றார்.

குந்தவை ஏமாற்றம் நிறைந்த முகத்தோடு மந்தாகினியைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு புறப்பட்டாள். அப்போது மலையமான் மகள் குந்தவையின் அருகில் வந்து, அவள் காதில் மட்டும் கேட்கும்படியாக, ''குழந்தாய்! இவள் இப்போது பார்க்கச் சகிக்காமல்தானே இருக்கிறாள்? அப்பாவிடம் வருத்தப்படுவதில் என்ன பயன்? உன்னுடைய அலங்காரக் கலைத் திறமையையெல்லாம் இவளிடம் காட்டு, பார்க்கலாம்!'' என்றாள்.

குந்தவை புன்னகை மூலம் தன் சம்மதியைத் தெரிவித்து விட்டு அங்கிருந்து மந்தாகினியை அழைத்துச் சென்றாள். அவர்களுடன் வானதியும் பூங்குழலியும் வெளியேறினார்கள்.

பிறகு சுந்தர சோழர் முதன் மந்திரியையும் மலையமான் மகளையும் மாறி மாறிப் பார்த்த வண்ணம், ''நீங்கள் இரண்டு பேரும் சேர்ந்து இந்தக் காரி

யத்தை எதற்காகச் செய்தீர்கள் என்று தெரியவில்லை. எனக்கு இதனால் சந்தோஷம் உண்டாகும் என்று நீங்கள் எண்ணியிருந்தால் அது பெருந் தவறு! முதன் மந்திரி! எதற்காக நீர் இவ்வளவு பிரயத்தனப்பட்டுக் கோடிக்கரையிலிருந்து இந்தக் காட்டு மிராண்டி ஜன்மத்தைப் பிடித்துக் கொண்டு வரச் செய்தீர்? இப்போதாவது உண்மையைச் சொல்லுங்கள்! இனிமேலாவது என்னிடம் எதையும் மறைத்து வைக்க முயல வேண்டாம்!'' என்றார்.

அப்போது முதன் மந்திரி அநிருத்தர் உணர்ச்சி ததும்பக் கூறினார்:—

''ஒரு தடவை செய்த பிழையை மறுபடியும் செய்ய மாட்டேன். இனி எந்தக் காரியத்தையும் தங்களிடமிருந்து மறைத்து வைக்கவும் உடன்படேன். உண்மை வெளிப்பட வேண்டுமென்பதற்காகவே இப்போது இவ்வளவு பிரயத்தனம் எடுத்துக் கொண்டேன். தங்களால் ஒரு பெண்மணி கடலில் விழுந்து இறந்ததாகத் தங்கள் மனம் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தது. அந்த சம்பவத்தைத் தாங்கள் மறந்து விட்டதாக வெகு காலம் நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் நாளாக ஆக அந்த நினைவு தங்கள் உள்ளத்தின் உள்ளே பதிந்து வேதனையை அதிகப்படுத்திக் கொண்டிருந்ததாக அறிந்தேன். தூக்கத்தில் தாங்கள் அதைப் பற்றிய கனவு கண்டு பலமுறை ஓலமிட்டதாக மகாராணி சொன்னார்கள். அதனால் தங்களைக் காட்டிலும் மலையமான் மகளார் அதிக வேதனை அடைந்தார்கள்! சில காலத்துக்கு முன்பு என்னிடம் யோசனை கேட்டார்கள். அதன் பேரில் நாங்கள் இந்தப் பிரயத்தனம் செய்யத் தீர்மானித்தோம். தங்கள் காரணமாக இறந்து விட்டதாகத் தாங்கள் நினைத்து வருந்திய பெண்மணியைத் தங்கள் முன்னாலேயே கொண்டு வந்து நிறுத்தி அந்த எண்ணத்தைப் போக்க உத்தேசித்தோம். நேரில் கொண்டு வந்து நிறுத்தினால்தான் தாங்கள் நம்புவீர்கள் என்று எண்ணினோம். இது குற்றமாயிருந்தால் கருணை கூர்ந்து மன்னிக்க வேண்டும்!''

இதைக் கேட்ட சக்கரவர்த்தி ஆத்திரம் பொங்கக் கூறியதாவது:—

''குற்றந்தான்! பெருங்குற்றம்! இத்தனை நாளும் இவள் பேயாக என்னைச் சுற்றிக் கொண்டிருந்தாள். கனவிலே வந்து கஷ்டப்படுத்திக் கொண்டிருந்தாள். பேய்க்குப் பதிலாகப் பிச்சியைக் கொண்டு வந்து என் முன்னால் நிறுத்தியிருக்கிறீர்கள். இது எனக்கு மகிழ்ச்சி தரும் என்று நினைத்தீர்களா? ஒரு நாளும் இல்லை. என்னிடம் முன்னதாக உண்மையைத் தெரிவித்திருந்தால் இவளை இங்கே அழைத்து வரும் யோசனையைக் கண்டிப்பாக நிராகரித்திருப்பேன். போனது போகட்டும். ஏதோ செய்தது செய்து விட்டீர்கள். வெகு கஷ்டப்பட்டு இங்கே இந்த ஊமைப் பைத்தியக்காரியை அழைத்து வந்து சேர்த்தீர்களே? திரும்பி அவளை எப்போது எப்படிப் போகச் செய்வதாக உத்தேசம்?'' இவ்வாறு சுந்தரசோழர் கேட்டதும், அநிருத்தர் உண்மையிலேயே பேச்சிழந்து நின்றார்.

அப்போது சக்கரவர்த்தினி, ''சுவாமி! இங்கிருந்து என் சகோதரியைத் திரும்பிப் போகச் செய்வதாகவே எனக்கு உத்தேசமில்லை. இந்த அரண்மனையில் என்னுடனேயே அவர் தங்கியிருப்பார். எனக்கு முன் பிறந்த தமக்கையைப் போல் பாவித்து இவரை நான் போற்றிப் பூசித்து வருவேன்!'' என்றாள்.

''தேவி! என்னிடம் உனக்குள்ள பக்தியை இந்த மாதிரி மெய்ப்பிக்க நீ பிரயத்தனப்பட வேண்டியதில்லை. கண்ணகியைக் காட்டிலும் மேலான கற்பின் அரசி என்பதை இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நான் கண்டிருக்கிறேன். நான் நோய்ப்பட்டது முதல் நீ உன் செல்வக் குழந்தைகளையும் மறந்து எனக்குப் பணிவிடைகள் செய்து வருவதையும் எனக்காக நோன்பு நோற்று வருவதையும் அறிந்துதானிருக்கிறேன். காட்டிலே திரிந்த ஊமைப் பிச்சியை அரண்மனையிலே அழைத்து வைத்து என்னிடம் உனக்குள்ள பக்தியைக் காட்ட வேண்டியதில்லை. மலையமான் மகளே! இதைக் கேள்! முதன் மந்திரி! நீங்களும் நன்றாய்க் கேட்டுக் கொள்

ளுங்கள். எப்போதோ ஒரு காலத்தில் மனித சஞ்சார மற்ற தீவாந்தரத்தில் நான் தன்னந்தனியே தங்கியிருந்த போது இந்த ஊமைப் பிச்சியைப் பார்த்தேன். அச் சமயம் இவளிடத்தில் பிரியம் கொண்டதும் உண்மை தான். இல்லை என்று சொல்லவில்லை. அதனாலேயே இன்னமும் நான் இவளை நினைத்து ஏங்கித் தவிப்பதாக நீங்கள் எண்ணினால், அதைவிடப் பெரிய தவறு செய்ய முடியாது. அப்போது இவள் பேரில் எனக்கு ஏற்பட்டிருந்த பிரியத்துக்கு எத்தனையோ காரணங்கள் இருந்தன. அந்தப் பிரியம் இந்த இருபத்தைந்து வருஷ காலத்தில் முற்றும் மாறித் துவேஷமாகவும் அருவருப்பாகவும் உருவெடுத்திருக்கிறது. கனவிலும் நினைவிலும் என்னை அவ்வளவாக இவள் கஷ்டப்படுத்தியிருக்கிறாள். இவள் இந்த அரண்மனையில் இருக்கிறாள் என்னும் எண்ணத்தையே என்னால் சகிக்க முடியவில்லை. உடனே இவளை இங்கிருந்து அனுப்பி விட்டு மறு காரியம் பாருங்கள். இவளைப் பேய் என்று நினைத்தபடியால் இவள் பேரில் விளக்கை எடுத்து எறிந்தேன். உயிரோடும் உடம்போடும் இருப்பவள் என்று அறிந்திருந்தால் என்ன செய்திருப்பேனோ, தெரியாது!''



வ்வாறு சுந்தர சோழர் குரோதம் ததும்பிய குரலில் கூறிய குரூரமான வார்த்தைகளைக் கேட்டுச் சக்கரவர்த்தினியும் முதன் மந்திரியும் கதிகலங்கிப் போனார்கள். சக்கரவர்த்தி இவ்விதம் பேசுவார் என்று அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை. அநிருத்தர் தாம் செய்த பழைய குற்றத்துக்காக மட்டுமே தம்மைச் சக்கரவர்த்தி கண்டனம் செய்வார் என்று கருதியிருந்தார். மகாராணியோ சக்கரவர்த்தி வாய்விட்டு வெளிப்படையாகச் சொல்லா விட்டாலும் மனத்திற்குள் மகிழ்ந்து பூரித்துத் தன்னுடைய பெருந் தன்மையான செயலை ரொம்பவும் பாராட்டுவார் என்று எதிர்பார்த்தாள்.

சுந்தர சோழரின் கொடிய வார்த்தைகள் அவர்களுக்கு ஏமாற்றமளித்ததோடு ஓரளவு வெறுப்பையும் கோபத்தையும் உண்டாக்கின.

சக்கரவர்த்தி இத்தனை நேரம் பேசியதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல், ''சீச்சீ! இந்த ஊமைப் பைத்தியக்காரி உலகில் உயிரோடு வாழ்ந்திரா விட்டால் என்ன நஷ்டம் நேர்ந்து விடும்? இவள் கடலில் விழுந்த போது உண்மையாகவே செத்துத் தொலைந்து போயிருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்! எந்தப் பரம முட்டாள் மெனக்கெட்டு இவளை எடுத்துக் காப்பாற்றினான்?'' என்றார்.

இதற்குப் பிறகு மலையமான் மகளால் பொறுக்க முடியாமற் போயிற்று. உருக்கம் ததும்பிய ஆவேசத்துடன் அவள், ''சுவாமி! தங்கள் வாயால் அப்படிச் சொல்லாதீர்கள்! மகா பாவம்! நன்றி மறத்தல் எவ்வளவு கொடிய பாதகம் என்று பெரியோர்கள் எத்தனையோ பேர் சொல்லியிருக்கிறார்களே? தங்கள் உயிரை இந்த மாதரசி காப்பாற்றியதை வேணுமானாலும் மறந்து விடுங்கள். ஆனால் நம் அருமைக் குமாரன் அருள்மொழிவர்மனை இவர் காப்பாற்றியதை மறக்கலாமா? தாங்கள் மறந்தாலும் நான் மறக்க முடியாது. பதினாலு ஜன்மத்துக்கும் இந்தத் தெய்வ மகளுக்கு நான் நன்றிக் கடன் பட்டிருப்பேன்!'' என்று சொன்னாள்.

''தேவி! அந்தக் கதையை மறுபடியுமா சொல்லுகிறாய்?...'' என்று சுந்தர சோழர் மேலும் பேசுவதற்குள் மலையமான் மகள் குறுக்கிட்டுக் கூறினாள்:—

''கதை அல்ல, சுவாமி! அருள்மொழியே என்னிடம் சொன்னான். காவேரி வெள்ளத்திலிருந்து தன்னைக் காப்பாற்றிய தேவிதான் ஈழத் தீவிலும் பலமுறை தன்னைக் காப்பாற்றியதாகச் சொன்னான். நல்ல வேளையாக, அவன் நாகைப்பட்டினத்திற்கு வந்து சுகமாயிருக்கிறான். அவனை

அழைத்து வரச் செய்யுங்கள். தாங்களே நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்!''

''ஆமாம், ஆமாம்! அருள்மொழி நாகைப் பட்டினத்தில் இருக்கிறான். ஆனால் அவன் சுகமாயிருக்கிறான் என்பது என்ன நிச்சயம்? நேற்று அடித்த பெரும் புயலில் அவனுக்கு ஆபத்து நேர்ந்ததோ என்னவோ? முதன் மந்திரி! என் உள்ளத்தில் நிம்மதி இல்லை! இனந்தெரியாத அபாயம் ஏதோ என் குலத்தை நெருங்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. இந்தச் சமயத்தில் இந்த ஊமைப் பிச்சி இங்கு வந்திருப்பதும் ஓர் அபசகுனமாகவே தோன்றுகிறது...''



''சுவாமி! கரையர் குல மகள் இங்கே இச்சமயம் வந்திருப்பது அபசகுனம் இல்லை; நல்ல சகுனம். இவர் இங்கிருப்பது நம்முடைய குலத்துக்கே ஒரு பாதுகாப்பு. நான் இடைவிடாமல் பிரார்த்தனை செய்யும் துர்க்கா பரமேசுவரியே என் மீது அருள் புரிந்து இந்தத் தேவியை அனுப்பி வைத்திருக்கிறாள்.....''

''இல்லவே இல்லை. துர்க்கா பரமேசுவரி அனுப்பவில்லை. சனீசுவரன் அனுப்பியிருக்கிறான். அந்தப் பிச்சியை உடனே திரும்பிப் போகச் சொல்லி விட்டு மறு காரியம் பாருங்கள். நீங்கள் முடியாது என்றால், நானே அந்தக் காரியத்தைச் செய்ய வேண்டியதுதான்....''

''சுவாமி! ரொம்பவும் கருணை கூர்ந்து எனக்கு இந்த வரத்தைக் கொடுங்கள். அருள்மொழி வந்து சேருகிற வரையில் அவர் இந்த அரண்மனையில் இருப்பதற்கு அனுமதி அளியுங்கள்!'' என்று சக்கரவர்த்தினி உருக்கமான



குரலில் கேட்டு விட்டுச் சுந்தர சோழரின் பாதங்களைத் தொட்டுப் பணிந்தாள்.

''முதன் மந்திரி! கேட்டீரா? வெளுத்ததெல்லாம் பால் என்று கருதும் மலையமான் மகளின் கோரிக்கையைக் கேட்டீரா? கடவுளே! இப்படியும் ஒரு கபடமற்ற சாது உலகத்தில் இருக்க முடியுமா? இவள் என்னிடம் எதுவுமே கோருவதில்லை. போயும் போயும் இப்படிப்பட்ட வரத்தைக் கேட்கிறாள். அதை மறுக்க மனம் வரவில்லை. ஆனால் அந்த ஊமைப் பைத்தியக்காரி இங்கே இருக்கும் ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு நரக வேதனையாக இருக்கும். ஆகையால், நாகையிலிருந்து இளவரசனை அழைத்து வர உடனே ஏற்பாடு செய்யுங்கள்!''

''அப்படியே செய்கிறேன், ஐயா! யானைப் படைகளும் குதிரைப் படைகளும் அனுப்பிப் பகிரங்கமாக இளவரசரை அழைத்து வரச் செய்யலாமா? அல்லது.....''

''மாறுவேடம் பூணச் செய்து இரகசியமாக அழைத்து வரலாமா என்று தானே கேட்கிறீர்? பகிரங்கமாக இளவரசன் வந்தால் சோழ நாட்டில் பெருங் குழப்பம் ஏற்படும் என்று எண்ணுகிறீர்கள் அல்லவா?''

''நான் எண்ணுவது மட்டும் அல்ல, பிரபு! நிச்சயமாக அறிந்திருக்கிறேன். மக்கள் பல காரணங்களினால் கொதிப்பு அடைந்திருக்கிறார்கள். ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான்; உடனே மக்களின் உள்ளக் கொதிப்பு வெளியே பீறிக் கொண்டு வரும். பழுவேட்டரையர்களும் மதுராந்தகத் தேவரும் என்ன கதி அடைவார்கள் என்று சொல்ல முடியாது....''

''இது என்ன பேச்சு, முதன் மந்திரி! குடிமக்கள் அப்படி மூர்க்கத்தனமாக நடந்து கொண்டால், சோழ நாட்டு வீர சைன்யங்கள் எங்கே போயின?''

''சைன்யங்களிடையே தான் கொதிப்பு அதிகம், பிரபு! மக்களாவது வெறுங் கூச்சல் குழப்பத்துடன் அடங்கி விடுவார்கள். சேனா வீரர்களோ, தஞ்சைக் கோட்டையைச் சின்னா பின்னமாக்கி, பழுவேட்டரையர்களையும் மதுராந்தகத் தேவரையும் சிறையில் அடைத்து விட்டு, ஈழங் கொண்ட வீராதி வீரராகிய அருள்மொழிவர்மரைச் சிங்காதனத்தில் ஏற்றி விட்டே மறு காரியம் பார்ப்பார்கள்....''

''அப்படி நடக்க வேண்டுமென்று நீங்களும் மனத்திற்குள் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள். முட்டாள் ஜோதிடர்கள் கட்டி விட்ட கதைகளை நம்பிக் கொண்டு குடிமக்களும் புத்தி தடுமாறி அலைகிறார்கள். ஆனால் உங்கள் மனத்தில் ஒன்று நிச்சயமாகப் பதிய வைத்துக் கொள்ளுங்கள். என் பெரிய பாட்டனார் கண்டராதித்த அடிகளின் குமாரன் மதுராந்தகனே இந்தச் சோழ சிம்மாசனத்துக்கு உரிமை உடையவன். அவனுக்கே பட்டம் கட்டி வைப்பதென்று தீர்மானித்து விட்டேன். மக்கள் அதற்குத் தடை சொன்னாலும் சரி, தேவர்களும் மூவர்களும் வந்து தடுத்தாலும் சரி, நான் கேட்கப் போவதில்லை. என்னுடைய குமாரர்கள் அதற்குக் குறுக்கே நின்றால்....''

''சுவாமி! அப்படி ஒருநாளும் நேராது. தங்கள் விருப்பத்துக்கு மாறாகத் தங்கள் குமாரர்கள் ஒரு நாளும் தடை சொல்ல மாட்டார்கள். அருள்மொழிக்கு இராஜ்ய ஆசையே கிடையாது. இலங்கை மணி மகுடத்தை அவனுக்குக் கொடுத்தார்கள். அதை அவன் வேண்டாம் என்று மறுதலித்து விட்டான். அப்படிப்பட்டவனா தங்கள் வார்த்தைக்கு மறு வார்த்தை கூறப் போகிறான்? கரிகாலன் மட்டும் என்ன? அவனுக்குத் தாங்களே பார்த்து யுவராஜ பட்டாபிஷேகம் செய்து வைத்தீர்கள். அதனால் ஒப்புக் கொண்டான். அவனுடைய வீர பராக்கிரமத்தைப் பற்றி நான் சொல்ல வேணுமா? அவன் ஆசைப்பட்டால் தானாகவே அவனுடைய வீரவாளின் உதவியைக் கொண்டு பெரிய இராஜ்யத்தை ஸ்தாபித்துக் கொள்ளக் கூடியவன் அல்லவா? ஆனால் அவனுக்கும் இராஜ்யம் ஆளுகிற ஆசை இல்லை. தாங்கள் அவனிடம் தங்கள் விருப்பம் இன்னதென்பது பற்றி ஒரே ஒரு

வார்த்தை சொல்ல வேண்டியது தான்....''

''அந்த வார்த்தை நான் சொல்லி விடப் போகிறேனே, அவன் காதில் விழுந்து விடப் போகிறதே என்பதற்காகத்தானே எத்தனை சொல்லி அனுப்பியும் இங்கே வராமல் ஆட்டம் போடுகிறான்?''

''சக்கரவர்த்தி! பட்டத்து இளவரசர் காஞ்சியில் அற்புதமான பொன் மாளிகை நிர்மாணித்து விட்டுத் தங்களின் வருகைக்காகக் காத்திருக்கிறார்.....''

''எதற்காகக் காத்திருக்கிறான் என்று எனக்குத் தெரியும். கம்ஸன் அவனுடைய பெற்றோர்களைச் சிறை வைத்தது போல் எங்களைச் சிறை வைத்து விட்டுச் சோழ சிம்மாசனம் ஏறக் காத்திருக்கிறான். அவன் கட்டியிருப்பது பொன் மாளிகையோ, அல்லது அரக்கு மாளிகைதானோ, யாருக்குத் தெரியும்?''

''சுவாமி! கரிகாலனைப் பற்றித் தாங்கள் இவ்வாறு சொல்வது மிகக் கொடுமை!'' என்றாள் மலையமான் மகள்.

''சக்கரவர்த்தியின் உள்ளத்தை அவ்வளவு தூரம் விஷமாக்கி வைத்திருக்கிறார்கள்!'' என்றார் முதன் மந்திரி.

''வேறு யாரும் இல்லை; என் மனத்தில் விஷம் ஏற்றியவன் கரிகாலனே தான். அவன் எனக்கு உண்மையான மகனாயிருந்தால் எத்தனை தடவை சொல்லி அனுப்பியும் ஏன் வரவில்லை?'' என்று சுந்தர சோழர் கேட்டார்.

''அதற்கு வேறு சரியான காரணங்களும் இருக்கலாம் அல்லவா?''

''நீங்கள்தான் ஒரு காரணத்தை ஊகித்துச் சொல்வதுதானே?''

''கரிகாலன் கொள்ளிடத்துக்கு இப்பால் வந்தால் பழுவேட்டரையர்கள் அவனைச் சிறைப்படுத்தி விடுவார்கள் என்று நாடெல்லாம் பேச்சாயிருக்கிறது......''

''அம்மாதிரி சொல்லி என் மகனுடைய மனத்தை யாரோ கெடுத்திருக்கிறார்கள்! இவளுடைய தகப்பன் திருக்கோவலூர் மலையமான் ஒருவன்; கொடும்பாளூர் வேளான் ஒருவன். நீங்களும் அவர்களோடு சேர்ந்து கொண்டீர்களோ, என்னமோ, தெரியவில்லை......''

''சுவாமி! நான் யாரைப் பற்றியும் அவர்களுக்குப் பின்னால் பேசும் பழக்கமில்லை. சற்று முன் தாங்களே அபாயத்தைப் பற்றிப் பேசினீர்கள். தங்கள் உள்ளத்தில் அவ்விதம் தோன்றுவதாகச் சொன்னீர்கள். தங்கள் உள்ளத்தில் தோன்றுவது முற்றிலும் உண்மை. சோழர் குலத்துக்கு அபாயம் நெருங்கிக் கொண்டுதானிருக்கிறது. அது இரண்டு வழியாக வருகிறது. இந்த நாட்டில் இப்போது இரண்டுவிதமான சதிகள் நடைபெற்று வருகின்றன. பழுவேட்டரையர்களும் சம்புவரையர்களும்......''

''முதன் மந்திரி அநிருத்தரே! நிறுத்துங்கள். பழுவூர் வம்சத்தார் நூறு ஆண்டுகாலமாகச் சோழகுலத்துக்குத் தொண்டு செய்து வந்தவர்கள். பெரிய பழுவேட்டரையர் இருபத்து நாலு போர் முனைகளில் போரிட்டுத் தமது மேனியில் அறுபத்து நாலு புண்களைச் சுமந்து கொண்டிருக்கிறார். அப்படிப்பட்டவர் இன்று சோழகுலத்துக்கு எதிராகச் சதி செய்கிறார் என்று சொல்வதைக் காட்டிலும், சூரியன் இருட்டாகி விட்டது என்றும், கடல் நீரில் தீப்பிடித்துக் கொண்டு விட்டது என்றும் சொல்லுவதை நம்பலாம்......''

''சக்கரவர்த்தி! சூரியனையும், கிரஹணம் பிடிக்கிறது. கடல் நீரில் வடவாமுகாக்கினி கொழுந்து விட்டெரிகிறது. ஆனால் அதைப் பற்றி நான் சொல்ல வரவில்லை. பழுவேட்டரையர்கள் சோழ குலத்துக்கு எதிராகச் சதி செய்வதாக நான் கூறவே இல்லை. மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்காக அவர்கள் மிகுந்த பிரயத்தனம் செய்து வருகிறார்கள்.....''

''மகா சிவபக்தராகிய கண்டராதித்தருடைய புதல்வருக்குப் பட்டம் கட்ட எண்ணுவதில் என்ன தவறு? சிம்மாசன உரிமை நியாயமாக மதுராந்தகனுக்குத்தானே உரியது?'' என்றார் சக்கரவர்த்தி.

''நானும் அதையேதான் சொல்லுகிறேன். மேலும் தாங்களே மனமுவந்து மதுராந்தகத் தேவருக்குச்

சோழகுலத்து மணி மகுடத்தை அளிக்கத் தீர்மானித்து விட்டீர்கள். அப்படியிருக்கும் போது பழுவேட்டரையர்கள் மீது குற்றம் என்ன? தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவே அவர்கள் பிரயத்தனப்படுகிறார்கள்.....''

''ஆகையினால் என்னுடைய நன்றியறிதலுக்கு மேலும் அவர்கள் பாத்திரமாகியிருக்கிறார்கள்.''

''ஆனால், சக்கரவர்த்தி, தங்களுடைய சம்மதம் பெறாத சில காரியங்களையும் செய்கிறார்கள். சோழ ராஜ்யத்தை இரண்டாகப் பங்கு போட்டுக் காவேரிக்குத் தெற்கேயுள்ளதை மதுராந்தகத் தேவருக்கும் வடக்கே உள்ள பகுதியைக் கரிகாலருக்கும் கொடுத்து விடுவதென்று யோசனை செய்து வருகிறார்கள். சம்புவரையர் மாளிகையில் இன்றைய தினம் அந்தப் பேச்சு நடந்து வருகிறது. சக்கரவர்த்தி! நூறு வருஷ காலமாகத் தங்கள் முன்னோர்கள் பாடுபட்டு விஸ்தரித்த ராஜ்யத்தை,— விஜயாலய சோழரும் ஆதித்த சோழரும் மகா பராந்தக சக்கரவர்த்தியும் ஈழம் முதல் கோதாவரி வரையில் நிலை நாட்டிய சோழ மகா ராஜ்யத்தை இரண்டாகப் பிளந்து பங்கு போடுவது தங்களுக்குச் சம்மதமா?''

''முதன் மந்திரி! ஒரு நாளும் அதற்கு நான் சம்மதம் கொடேன். சோழ இராஜ்யத்தைப் பிளப்பதற்கு முன்னால் என்னை வெட்டிப் பிளந்து விடுங்கள் என்று சொல்லுவேன். பழுவேட்டரையர் அத்தகைய முயற்சியில் இறங்கியிருப்பார் என்று நான் நம்பவில்லை. ஒருவேளை எனக்கு அது பிரியமாயிருக்கலாம், என் மகனுக்குப் பாதி இராஜ்யமாவது கொடுக்க நான் ஆசைப்படலாம் என்ற எண்ணத்தினால் அவர் இந்த யோசனைக்கு இணங்கியிருப்பார். அது எனக்கு விருப்பமில்லையென்று தெரிந்தால் கைவிட்டு விடுவார். முதன் மந்திரி! இந்தச் சோழ சாம்ராஜ்யத்தில் ஒரு அங்குல விஸ்தீரணம் கூடக் குறையாமல் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டி வைப்பேன். அதை என் மக்கள் எதிர்த்தாலும் சரி, பழுவேட்டரையரே எதிர்த்தாலும் சரி, நான் கேட்கப் போவதில்லை.''

''சக்கரவர்த்தி! பழுவேட்டரையர் எதிர்த்தால் பொருட்படுத்த வேண்டியதில்லை. தங்கள் புதல்வர்களோ எதிர்க்கப் போவதில்லை. ஆனால் மதுராந்தகருக்குப் பட்டம் கட்டுவதற்குத் தடை இவையெல்லாம் அல்ல. அந்தத் தடை இன்னும் பெரிய இடத்திலிருந்து வருகிறது. தாங்களும் நானும் இந்தச் சோழ நாட்டு மக்கள் அனைவரும் போற்றி வணங்கும் தெய்வப் பெண்மணியிடமிருந்து அந்தத் தடை வருகிறது. சில நாளைக்கு முன்பு கூட அவரிடம் பேசிப் பார்த்தேன்.....''

''செம்பியன் மாதேவியை நீங்கள் குறிப்பிடுகிறீர்கள். அந்த மாதரசியின் மனத்தையும் யாரோ கெடுத்திருக்கிறார்கள். நான் என் புதல்வர்களுக்குப் பட்டம் கட்ட ஆசைப்படுவதாகப் பெரியபிராட்டி கருதி வருகிறார். முதன் மந்திரி! அவரை உடனே இங்கு அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். நான் அவருடைய மனத்தை மாற்றி விடுகிறேன்....''

''சக்கரவர்த்தி! அது அவ்வளவு சுலபம் அல்ல. மகான் கண்டராதித்தர் தமது தர்மபத்தினிக்கு அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றிருக்கிறார். அவருடைய மரணத் தறுவாயில் நான் அவர் அருகில் இருந்தேன். 'மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டக் கூடாது என்பதற்கு முக்கிய காரணம் இருக்கிறது; அது என் துணைவிக்குத் தெரியும்' என்று தங்கள் பெரிய பாட்டனார் சொன்னார்....''

''முதன் மந்திரி! அப்படிப்பட்ட தடை உண்மையில் இருக்கிறதா? அது இன்னதென்று உங்களுக்குத் தெரியுமா?''

''தெரிந்திருந்தால், தாங்கள் கேட்கும் வரையில் காத்துக் கொண்டிருப்பேனா? பெரிய பிராட்டியை அழைத்து வரச் செய்து தாங்கள்தான் அதைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும்.''

''ஆமாம், அந்த ஒரு விஷயந்தான் எனக்கும் தொல்லை கொடுத்து வருகிறது. பெரியபிராட்டியை உடனே அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள். எப்பேர்ப்பட்ட தடையா

# இதோ ஒரு ஸ்ரீராம் குடும்பம்!



நிற்பவர்கள் : 1. குமாரி தி. பரணி கோமதி 2. தி. துரைமுருகன். உட்கார்ந்திருப்பவர்கள் : 1. பால இரமணி 2. ஆண்டாள் பிரியதர்சினி, 3. புலவர் திருமதி ஆ. சுப்புலட்சுமி கணபதி. 4. கவிஞர், புலவர் நெல்லை ஆ. கணபதி.

''எங்கள் குடும்பம் ஒரு இனிய குடும்பம். நான், என் மனைவி, இருமகள்கள், மருமகன், மகன் ஆகிய 6 பேர்கள் கொண்ட குடும்பம். எங்கள் குடும்பத்தினர் ஆசிரியத்துறை, எழுத்துத்துறை, இலக்கியத்துறையில் ஈடுபாடு கொண்டவர்கள். நாங்கள் எல்லோருமே நெடுங்காலமாக ஸ்ரீராம் சீட்டு நிதியில் அங்கத்தினர்களாக உள்ளோம். மிக்க பயன் அடைந்துள்ளோம். எங்கள் வீட்டு திருமணத்திற்கும், வீடு புதுப்பிக்கவும் ஸ்ரீராம் சீட்டு நிதி தக்க சமயத்தில் உதவியது. எங்களைப் போலவே எல்லோரு ஸ்ரீராமில் சேர்ந்து பயன்பெற வேண்டுமென்பதே எங்கள் அவா.''

கவிஞர், புலவர் நெல்லை ஆ.கணபதி M.A., M.Ed.

இந்த இனிய குடும்பத்தைப்போல் தென்னாட்டில் பல ஆயிரம் குடும்பங்கள் ஸ்ரீராம் சீட்டு நிதியில் அங்கத்தினராக உள்ளன.

ஸ்ரீராம் குடும்பம் பெரிது. 1,25,000 அங்கத்தினர்களை உடையது. உங்கள் எல்லோரது உறுதுணையினால்தான் இன்று நாட்டிலேயே முதன்மையான சீட்டு நிறுவனமாகத் திகழ்கிறது ஸ்ரீராம். ஆண்டுக்கு ரூ.80 கோடிக்கு மேல் பட்டுவாடா செய்கிறது. தமிழ்நாடு, ஆந்திரா, கர்னாடகா ஆகிய இடங்களில் மட்டும் 21 கிளைகளைக் கொண்டது.

மேலும் சில இடங்களில் புதிய கிளைகளை தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று தொடங்குகிறோம்.

**புத்தாண்டுப் புதுமலர்!**

தமிழ்ப்புத்தாண்டு தினத்தன்று சேரும் புதிய அங்கத்தினர்களுக்கு சிறப்பு அன்பளிப்புகள் பல உண்டு!




**ஸ்ரீராம்** சிட்ஸ் & இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 2. போன்: 474451/ 475536/470400/473932.

ADWAVE/SCI/3745

**ஸ்ரீராம் சேமிப்பில் சேருங்கள், சீரும் சிறப்புமாய் வாழுங்கள்.**



## அருள்வாக்கு



தேஹாரோக்யத்துக்கேயான் அநேக யோகாசனங்கள் இருக்கின்றன. இவற்றிலும் கொஞ்சம் ஜாக்கிரதை தேவைதானென்றாலும், மற்ற யோக ஸாதனைகளைப் போல இதில் கஷ்டமோ ஆபத்துக்கான ஹேதுவோ அவ்வளவு அதிகமாக இல்லை. சில காலமாக ஸ்கூல்களிலேயே இவற்றைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்றும் ஒரு பேச்சு அடிபடுகிறது. கையை, காலை, உடம்பை நுட்பமாக வளைத்துப் பண்ண வேண்டிய அப்யாஸத்தை அத்தனை குழந்தைகளுக்கும் கவனமாகச் சொல்லிக்கொடுப்பதற்குப் போதிய ஆசிரியர்கள் இருக்க வேண்டும். அதுவுமில்லாமல் யோகாசனம் போடுவதற்கென்று ஒரு காலம் உண்டு. அப்போது வயிற்றில் ஆஹாரம் இருக்கப் படாது என்று விதி. இவற்றை மீறினால் ஆரோக்யத்துக்குப் பதில் அநாரோக்யந்தான் வரும். ஆகையால் அதற்கான கட்டு திட்டம் குலையாமல் சற்றுக் கொடுக்க முடியுமா என்று, நிச்சயப்படுத்திக் கொண்டு 'மாஸ் ஸ்கேலில்' ஸ்கூல்களில் சொல்லிக் கொடுக்கலாம். நம்முடைய குழந்தைகள் நல்ல தேஹ திடத்துடனிருப்பதற்காக எப்படியும் யோகாசனத்தை விருத்தி செய்யத்தான் வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

யிருந்தாலும் அதை நான் நிவர்த்தி செய்கிறேன். அவரை அழைத்து வருவதற்கு யாரை அனுப்பலாம்? ஏன்? என் குமாரியையே அனுப்புகிறேன். தேவி! குந்தவையை உடனே இங்கு அழைத்து வா!'' என்று சுந்தர சோழர் மலையமான் மகளைப் பார்த்துக் கூறினார்.



சக்கரவர்த்திக்கும் முதன் மந்திரிக்கும் நடந்த சம்பாஷணையை வானமா தேவி ஒரு காதினால் கேட்டுக் கொண்டிருந்தாலும், அவளுடைய கவனமெல்லாம் சற்று முன் அங்கிருந்து சென்ற ஊமை ராணியின் பேரிலேயே இருந்தது. ஆதலின் சக்கரவர்த்தி குந்தவையை அழைத்து வரும்படி சொன்னதும் மலையமான் மகள் அங்கிருந்து அந்தப்புரத்துக்கு விரைந்து சென்றாள்.

அவள் அந்தப்புரத்தை அடைந்த போது குந்தவை, வானதி, பூங்குழலி ஆகியவர்கள் பெருங் கலக்கத்தில் ஆழ்ந்திருந்தார்கள். அதற்குக் காரணத்தையும் மகாராணி உடனே தெரிந்துகொண்டாள். ஊமை ராணியை அங்கே காணவில்லை. எங்கே என்று கவலையுடன் கேட்டபோது குந்தவை கூறியதாவது:— ''அம்மா! தங்கள் கட்டளையை நிறைவேற்றுவது சுலபமான காரியமாக இல்லை. ஆயினும் நாங்கள் மூன்று பேருமாகச் சேர்ந்து வற்புறுத்தி மந்தாகினி தேவியைக் குளிப்பாட்டினோம். பிறகு புதிய ஆடைகள் அணிவித்தோம். வானதி அவருடைய கூந்தலை வாரி முடிந்து கொண்டிருந்தாள். பூங்குழலி பூத் தொடுத்துக்கொண்டிருந்தாள். ஆபரணங்கள் எடுத்து வருவதற்காக நான் அடுத்த அறைக்குப் போனேன். ஆபரணங்கள் எடுத்துக் கொண்டிருந்த போதே இவளுடைய கூச்சல் கேட்டது. திரும்பி வந்து பார்த்தால் மந்தாகினி தேவியைக் காணவில்லை. கூந்தலை வாரி முடி போட்டவுடனே திடீரென்று அவர் திமிறிக்கொண்டு ஓடிப் போனாராம். அக்கம் பக்கத்து அறைகளில் எங்கேயும் காணவில்லை. இன்னமும் தேடிக் கொண்டிருக்கிறோம்!''

இதைக் கேட்டு மலையமான் மகள் புன்னகைபுரிந்தாள். ''அவருக்கு அலங்காரம் செய்தபோது எதிரில் கண்ணாடி இருந்ததா?'' என்று கேட்டாள். ''இருந்தது; சற்றுத் தூரத்தில் இருந்தது'' என்றாள் வானதி.

''அவருடைய அலங்கரித்த உருவத்



மானேஜர்: ஆபீஸுக்கு லேட்டா வந்த துக்குத் தினமும் ஒரு நொண்டிச் சாக்கு சொல்லுவீங்களே, இன்னிக்கு ஏன் லேட்டு...?

கிளார்க்: கால்ல சுளுக்கு சார்!

— வி. சாரதிடேச்சு.

ணைத் தற்செயலாகக் கண்ணாடியில் பார்த்திருப்பார். அது அவருக்கு வெட்கத்தை உண்டாக்கியிருக்கும். அதனால் ஓடி எங்கேயாவது மறைந்து கொண்டிருப்பார். இன்னும் நன்றாகத் தேடிப் பாருங்கள். ஒருவேளை அந்தப்புரத்துப் பூங்காவிற்குச் சென்று ஒளிந்து கொண்டிருந்தாலும் இருப்பார். மதில் ஏறிக் குதிப்பது, பலகணி வழியாகக் குதிப்பது போன்ற காரியங்கள் தான் அவருக்கு வழக்கமானவை ஆயிற்றே?'' என்றாள் சக்கரவர்த்தினி.



றகு எல்லாருமாக நந்தவனத்துக்குச் சென்று தேடினார்கள். அங்கும் ஊமைராணி அகப்படவில்லை. அவர்களுடைய கவலை அதிகமாயிற்று. முதன் மந்திரியிடமும் சக்கரவர்த்தியிடமும் போய்த் தெரிவிக்கலாமா என்று அவர்கள் எண்ணத் தொடங்கிய போது எங்கிருந்தோ 'டணார்' 'டணார்' என்று ஒரு சத்தம் வந்தது. கருங்கல்லில் இரும்பு உளியினால் ஓங்கி அடிப்பது போன்ற ஓசை அது. எங்கிருந்து அந்த ஓசை வருகிறது என்று காது கொடுத்துக் கவனமாகக் கேட்டார்கள். சிற்ப மண்டபத்திலிருந்து வருகிறதென்று தெரிந்தது. உடனே ஒரு தாதிப் பெண்ணைத் தீபம் எடுத்துக்கொண்டுவரும்படி சொல்லிவிட்டு எல்லாரும் சிற்ப மண்டபத்துக்குச் சென்றார்கள். சிற்பமண்டபத்துக்குள்ளே அவர்கள் ஒரு விந்தையான காட்சியைக் கண்டார்கள், ஓரளவு ஆடை அலங்காரங்கள் அணிந்து விளங்கிய மந்தாகினி கையில் ஒரு நீண்ட பிடியுள்ள சுத்தியை வைத்துக் கொண்டு கைலாச மலையைத் தாங்கிக் கொண்டிருந்த இராவணேசுவரனுடைய கரங்களை ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டிருந்தாள். மிக உறுதியான கல்லினால் செய்யப்பட்ட சிற்பமாதலால் அந்தத் தாக்குதலுக்கு இராவணன் அது வரையில் அசைந்து கொடுக்கவில்லை. ஆனாலும் சீக்கிரத்தில் அவனுக்கு ஆபத்து வந்து விடலாம் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. கைலாச மலையைத் தாங்கிக் கொண்டிருந்த இராவணனுடைய கரங்களில் இரண்டு மூன்று கைகள் ஒடிந்து விட்டால் மலையே இடம் பெயர்ந்து அவன் தலைகளின் மீது இன்னும் நன்றாக உட்கார்ந்து விடக்கூடும்! தலைகள் சுக்குநூறாக நொறுங்கி விடக்கூடும்! அத்தகைய ஆபத்தான நெருக்கடியிலே தான் குந்தவை முதலியவர்கள் சிற்ப மண்டபத்துக்குள் பிரவேசித்தார்கள்.

அவர்களுடைய வரவைப் பார்த்ததும் மந்தாகினி தன்னுடைய கையில் பிடித்திருந்த சுத்தியைக் கீழே போட்டுவிட்டு வந்தவர்களைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டு நின்றாள்.

மண்டபத்துக்குள் பிரவேசித்தவர்களில் பூங்குழலியைத் தவிர மற்றவர்களின் உள்ளங்களில் ''இவள் ஒரு பைத்தியக்காரப் பிச்சிதான்! சக்கரவர்த்தி இவளைக் கண்டு அருவருப்பு அடைவதில் வியப்பு ஒன்றுமில்லை!'' என்ற எண்ணம் தோன்றியது.

மலையமான் மகள் மற்றவர்களைப் பார்த்து, ''பெண்களே! இதைப் பற்றிச் சக்கரவர்த்தியின் முன்னிலையில் யாரும் பிரஸ்தாபிக்க வேண்டாம்!'' என்று எச்சரிக்கை செய்தாள்.

(தொடரும்)

# GOKULAM

*Wishes its young readers a very happy Tamil New Year!*

**APRIL HIGHLIGHTS :**

* **The Story of the Vajrayudha**
  — *picture story in colour*
* **Heidi**
  — *the girl from the mountains*
* **The Blue Star Special**
  — *Sukanya's "special" toy train*
* **Garden of the Moon Goddess**
  — *the tale of the clever rabbit*



Annual Subscription : Rs. 36.00 (India)
Overseas : Rs. 270.00 (Air mail)
: Rs. 120.00 (Sea mail)

For agency and subscription contact:
Gokulam, Guindy, Madras-600 032.
Telephone: 434157, 434190.

**96 pages;**
**Price : Rs. 3.00**

























எல்லா பிரபல
கடைகளிலும்
கிடைக்கிறது




**Ajanta® QUARTZ**

நாளைய தொழில்நுட்பம் இன்றே தொடக்கம்

பதிவு அலுவலகம் :
**அஜந்தா ட்ரான்ஸிஸ்டர் க்ளாக்**
**மேன்யுபாக்சரிங் கம்பெனி**
பிருதிவிராஜ் ப்ளாட், த.பெ.
எண் : 115, மோர்வி-363 641
தொலைபேசி : 3627, 2280, 2457, 2433
டெலெக்ஸ் : 0168212 ATCM
GRAM : VANITHA

**எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கிறது.**

KPS/AM/1-89/TAM

# பாட்டுக்கு ஒரு தலைவன்



ஒன்றுமில்லை, ஒரு மக்கடை ரௌடி, ஏழைப் பெண் கையைப் பிடித்து இழுத்துட்டான், ஐயா! அதுக்குப் பாடம் புகட்டறாராம் ஹீரோ விஜயகாந்த். எப்படி? ஒரு சிறப் பங்காடிக்குள் புகுந்து கிட்டத்தட்ட ஒரு ரெண்டாயிரம் அடி நீட்டத்துக்குச் சிறிப் பாய்ந்து அடித்து நொறுக்கியதில் பத்துப் பன்னிரண்டு ஷோ—கேஸ் கண்ணாடிகள், மானாவாரியான கண்ணாடிச் சாமான்கள் எல்லாம் தூள் தூளாகிப் போய்... என்னங்க றேன், மூட்டைப் பூச்சியை நசுக்கப் பட்டாக் கத்தியிலே வெட்டினாப்ல! ஒரு விவஸ்தை கிடையாது?

இதுக்கு மேல அநியாயம் அந்தக் கடைசி கார் ஸ்டண்ட். ஆபத்தின் தரத்துக்கும் அளவுக்கும் ஏற்ற அளவிலே மோதல் இருந்தால் எடுக்கும்.

பாட்டுக்கு ஒரு தலைவன் யார் என்றே புரியவில்லை. ஆர்மோனியப் பெட்டியில் வாசிக்க, ஷோபனாவுக்குப் பின்னால் விஜயகாந்த் அலைவது 'அம்மன் கோயில் கிழக்காலே' என்று சொல்லத் தோன்றுகிறது. அதில் கற்றுக் கொடுக்க அலைந்தார். இதில் கற்றுக் கொள்ள அலைகிறார். ஆனால் கதையிலே அதன் சுருதி சேரவில்லை.

ஒன்று மட்டும் நிச்சயம். இந்த மாதிரி பக்கா வெகுளி காரெக்டரில் விஜயகாந்த் தலை காட்டியதில்லை. வண்டிக் கடையாணி திருட்டுப் போவதாய் வழியோடு நிற்பவர் எச்சரிக்க, விஜயகாந்த் உஷாராகி, முன்னெச்சரிக்கையாய்க் கடையாணியைக் கழற்றி இடுப்பில் செருகி வைத்துக் கொண்டு வண்டியோட்டி, குடை சாய்ந்து காயப்பட்டு, காதலி கை தூக்கி விட்ட போது தன் 'புத்திசாலித்தனத்தை' — அது தான் கடையாணி விவகாரம் — பீற்றிக் கொள்கிற அளவுக்கு வெகுளியாம்! இந்த வெகுளி சமயத்தில் அதிமேதாவியாய்ச் செயல்படும் போது அவருக்கு அந்தத் திமர் ஞானம் தந்த போதி மரம் எது என்று புரியாமல் திகைக்க வேண்டியிருக்கிறது.

ஷோபனா முகபாவம் காட்டும் விதத்தில் சிறக்கிறார். வண்டிச் சக்கரத்தில் அடிபட்டு விஜயகாந்த் இவரிடம் தன் கைக் காயத்தைக் காட்ட, 'இதுக்கு என்னண்டை மருந்து இருக்கே!' என்று சொல்லி, ஷோபனா கையை ஏந்தி வஞ்சனையில்லாமல் முத்தம் தர, விஜயகாந்த் சிலிர்த்துப் போய், 'ஆமா, வலி போயிடுச்சே...' என்று கண்களை அகல விரித்துக் கூறும் போது கிளுகிளுப்பாய்த்தான் இருக்கிறது. ஆனால் 'இப்ப இங்க வலிக்குதே,' என்று முகத்தில் பார்ட் பார்ட்டாகக் காட்டிக் கொண்டு வர இவர் அத்தனை இடங்களிலும் உதட்டைப் பதிக்கும் போது மரத்துப் போய் விடுகிறது.

நம்பியார் — விஜயா தாம்பத்தியத்தில் பிள்ளைப் பாசம் பீறிடுகிறது. குறிப்பாக எதிரியின் வீட்டில் போய்ப் பெண் கேட்பதா என்று நம்பியார் பின்வாங்கும் போது, 'நம்ம இருபத்து நாலு வயசு குழந்தைக்கு எனக்கு அப்புறமும் கவனிச்சிக்க ஒரு நல்ல தாய் வேணுங்க,' என்று ஆரம்பித்து, நம்பியாரை விஜயா மடக்கும் கட்டத்தில் வசனமும் கரிசனமும் பாந்தமாய் இழைகின்றன.

தலைப்புக்காகவாவது முணுமுணுக்கிற மாதிரி பாட்டுக்கள் இருக்கும் என்று பார்த்தால், அம்பேல். ஆனால் காமெரா தாளம் போட வைக்கிறது. சுகமான ஒளிப்பதிவு.

சண்டைக் காட்சிகளுக்கும் சட்டை துணிமணிகளுக்கும் மெனக்கெட்டதில், பத்தில் ஒரு பங்கு கதைக்கும் காரெக்டர் உறுதிப் பாட்டுக்கும் கவனம் செலுத்தியிருந்தால் விஜயகாந்த் வேர் விட்டிருப்பார்.

— பி.எஸ்.எஸ்.

# சுகபோகத் தீவுகள்

அதை அறை என்று சொல்வது தவறு. கதவைத் திறந்ததும் ஒரு பெரிய பங்களா விரிந்தது. தடித் தடியாக, உட்கார்ந்தால் ஆளை உள்வாங்கிக் கொள்கிற சோபாக்கள். ஏராளமான டர்க்கி டவல்கள். எழுதுவதற்குப் பேப்பர், பேனா கவர். துளி அழுக்குப்படாத வெள்ளை வெளேர் படுக்கை. வட்டக் கறை, எண்ணெய்ப் பசை, அழுக்கற்ற தலையணை. கடைக்கோடியில் கதவைத் திறந்தால் ஒரு மொட்டை மாடி. அந்த மூன்றாவது மாடியிலும், செயற்கையாகச் செய்த மூன்று நான்கடி குன்று. குன்றை ஒட்டி, ஓர் எட்டு முழ வேஷ்டியை விரித்தாற் போன்ற ஒரு சின்னஞ் சிறிய குளம்.

கிருஷ்ணமூர்த்தி பிரமித்து நிற்பதைப் பார்த்து, ராமசாமி சொன்னார்.

''இதன் ஒரு நாள் வாடகை என்ன தெரியுமா?''

''தெரியாது.''

அவர் சொன்னதைக் கேட்டதும், அவன் விக்கித்துப் போனான். ஒரு பெரிய அரசு அதிகாரியின், ஒரு சீனியர் பேராசிரியரின் மாசச் சம்பளம் அவர் சொன்ன தொகை. இந்த 'சூட்'டின் ஒரு நாள் வாடகை அது. தின்பது, குடிப்பதற்குத் தனி. இந்த நாட்டை ஏழை நாடு என்கிறார்களே. அது எவ்வளவு பெரிய பொய். ஒரு நாளைக்குப் பதினைந்தாயிரமும், முப்பதினாயிரமும் செலவு பண்ணும் மனிதர்கள் வாழ்கிற நாடு ஏழை நாடாகுமா?

''என்ன யோசிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் ராமசாமி.

சொன்னான்.

''ஐயையயே. எந்த நேரத்தில் என்ன யோசிக்கிறது? சொர்க்கத்துல வந்து உட்கார்ந்துகிட்டு, கோமணத் துணியைப் பற்றியா யோசிக்கிறது. விடுங்க சனியனை. பொறவியை அனுபவிங்க...'' என்றவர், அவனைப் பார்த்துக் கௌரவம் இல்லாத சிரிப்பொன்றைச் சிந்தினார்.

பதினொரு மணிக்கு மேல் ராமசாமி வெந்நீரில் ஆவி பறக்கக் குளித்தார். மேலும் கீழுமாக, டர்க்கி டவலைக் கட்டிக் கொண்டு அனுபவித்தார். அப்படியே டெலிபோனுக்கு முன் அமர்ந்து பத்து இருபது பேருக்குத் தொடர்பு கொண்டு பேசினார். பிறகு அவனைப் பார்த்துச் சொன்னார்.

ஆட்களையெல்லாம் உடனே வரச் சொல்லியிருக்கேன். இன்னும் அரை, ஒரு மணியில வந்திடுவான்கள். அதற்குள் நாம் தயாராகிவிட வேண்டும். நீங்கள் குளித்து ரெடி-ஆகுங்கள்'' என்றார்.

அவன் குளித்து உடை மாற்றி வந்த போது, ஸ்டுவர்ட் யூனிபார்ம் அணிந்த ஒருவனிடம் அவர் பேசிக் கொண்டிருந்தார்.

''நல்ல வேளை, சந்துரு. நீயே டூட்டியில இருக்கே. எங்கே இல்லாமே போயிடுவியோன்னு இருந்துச்சு. நம்ம ஆட்கள் பத்துப் பன்னிரண்டு பேர் வருவாங்க. நாலு விதமான பாட்டில், சோறு, பிரியாணி, சிக்கன், எல்லாம் கொடுத்துடு. உனக்குத்தான் தெரியுமே. நம்ம ஆட்கள் வாயைத் திறந்தா சிக்கன்தானே கேப்பாங்க. எல்லாம் ஒண்ணு, ஒண்ணரைக்கு முடிஞ்சிடும். அப்புறமா, எல்லாப் பயலும் போன பிறகு, வழக்கம் போல எங்களைக் கொஞ்சம் கவனி. சார், புதுசு. நல்லாப் படிச்சவரு. பெரிய இடத்து உறவு. புரியுதா?''

சந்துரு, கிருஷ்ணமூர்த்தியை அரைச் சிரிப்போடு பார்த்தான். கிருஷ்ணமூர்த்திக்கு வெட்கமும், அவமானமும் பிடுங்கித் தின்றன.

''கிருஷ்ணமூர்த்தி சந்துருவைப் பார்த்து வச்சுக்குங்க. ஆள் கில்லாடி! ராத்திரி ரெண்டு மணிக்கு எழுப்பிப் புலிப்பால் வேணும்னு கேளுங்க... 'என்ன புலி. வரிப் புலியா, கழுதைப் புலியான்னுதான் கேட்பான். அரை மணியிலே, ஆழாக்குப் பால் ஆஜர். கெட்டிக்காரன்.''

சந்துரு, ராமசாமி சொல்வதை அனுபவித்துக் கேட்டுக் கொண்டிருந்தான்.

அடுத்த அரை மணியில், மாவட்டச் செயலாளர் மற்றும் அவர்களுக்குத் துணை, இணைப் பொறுப்பில் இருக்கும் எதிர்காலத் தலைவர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினர். சொல்லி வைத்தாற்போல எல்லோருமே, ''என்ன, ராமசாமி அண்ணே... ராத்திரி நல்ல நேரமா பார்த்து எங்களைக் கூப்பிட்டிருக்கீங்க... பாட்டிலுக்கும் பிரியாணிக்கும் சொல்லுங்க'' என்று சொல்லிக் கொண்டே வந்ததுதான் கிருஷ்ணமூர்த்திக்கு ஆச்சர்யமும் அதிசயமுமாய் இருந்தது. கூடவே கிருஷ்ணமூர்த்தியிடம், ''அண்ணனைக் கொஞ்ச நாளா பார்த்துக்கிட்டு வர்றோம். தலைவர்கிட்டே நெருங்கறீங்க. கூடிய சீக்கிரமே பெரிய பொறுப்புகூட அண்ணனுக்கு வரும். நம்மளை மறந்துடப் படாது. நாங்க எல்லாம் தலைவருக்கு போஸ்டர் ஒட்டி, அடிதடி வம்பு வழக்கிலே கட்சியை வளர்த்தோம். பழசு மறக்க மாட்டாரு தலைவர். நீங்களும் எங்களையெல்லாம் மறந்துடக் கூடாது'' என்று ஒரு பாட்டம் அழுவது மாதிரி சொன்னதும் அவனுக்கு என்னமோ போல இருந்தது.

வந்திருந்தவர்களிலேயே வயதானவரும்,

பிரபஞ்சன்



கட்சியின் மிகப் பழைய மனிதருமான வெள்ளை முத்து உணர்ச்சி வசப்பட்டுச் சொன்னார்.

''ஒரு விஷயத்தை நாம் கவனிக்க வேணும். தலைவரோட நெருங்கி இருந்தவங்க எல்லோருமே வசதியாயிட்டாங்க. தலைவருக்குத் தெரிஞ்சும், தெரியாமயும் பணம் பண்ணிக்கிட்டாங்க. நம் அமைச்சர்களிலே, எத்தனை பேர் பினாமி பேரில் சினிமாத் தியேட்டர் கட்டியிருக்காங்க, வீடுகள், மனைகள், பிளாட்கள் வாங்கியிருக்காங்க. தங்கக் கட்டிகள் வச்சிருக்காங்க என்கிறதும் நமக்குத் தெரியும். தொண்டர்களுக்கும் தெரியும். நான் வயிறு எரியலை. நம் ஆளுகள் பிழைக்கட்டும். ஆனா, தொண்டர்கள் மத்தியிலே, 'நமக்கு என்ன கிடைக்குது?' என்கிற மாதிரி ஒரு சின்ன வருத்தம் இருக்குது. அதனால, போராட்டம், பேரணி அது இதுன்னு கூப்பிட்டா கொஞ்சம் தாராளமா சில்லறை எதிர்பார்க்கிறாங்க... உட்கட்சி ஜனநாயகம்னு சொல்றதில்லையா? அது போல் பணம் சீரா பங்கிடப்படணும். ராமசாமி அண்ணே, கவனிக்கிறீங்களா?''

''புரியுது. புரியுது. பணம் விஷயம் பத்திக் கவலைப்படாதீங்கண்ணே. அடிச்சு விட்டுறுவம். ஆளுகளைத் தயார் பண்ணுங்க... லாரி ஆளுகளுக்கு இவ்வளவுன்னு தனியாப்

பேசிக் குடுத்துடுவோம். வெளியூர்த் தொண்டர்களுக்குப் போக்குவரத்துச் செல வையும் சரிக்கட்டிடுவம்'' என்றார் ராம சாமி.

''ஏம்பா வெயிட்டர், என்ன முந்திரிப் பயிரையே காணோம். பார்ட்டின்னா, முந்திரி வறுவல் இல்லாமே என்னப்பா?'' என்றது ஒரு புள்ளி.

''சிக்கனில் மொத்தம் எத்தனை விதம் இருக்கு? நீ என்னப்பா, எப்பவும் இந்த வெறும் வதக்கலையே தர்றே?'' என்று சலித்துக் கொண்ட மற்றொரு வட்டம் ராம சாமியிடம் அலுத்துக் கொண்டது.

நள்ளிரவைத் தாண்டியும், கூட்டம் நடை பெற்றுக் கொண்டிருந்தது. ஒரு கட்டத்தில், ராமசாமி சொன்னார்.

''சரி... நாம் கூட்டத்தை முடிச்சுக்கிடு வமா? இன்னும் கொஞ்ச நாழியிலே விடிஞ் சுடும் போல இருக்கே.''

''நமக்கு விடிஞ்சா போதுமா, அண்ணே! நாட்டுக்கு விடிய வேண்டாமா?'' என்றார் ஒருவர்.

''பொதுக் கூட்டத்தில இதைப் பேசு. கை தட்டுவான். இப்போ, கிளம்பு.''

''இருங்க அண்ணே. ஒஸ்தி சரக்கு வாங் கிக் கொடுத்திருக்கீங்க.. அனுபவிச்சுக் குடிக்க விட மாட்டேங்கறீங்க''

''அட கௌம்புங்கப்பா. வேணும்னா, பாட்டிலைக் கையில் எடுத்துக்குங்க..''

கிளாசில் மிச்சமிருந்த திரவத்தை அவர் கள் ஒரே மூச்சில் விழுங்கினர். சிலர் பை கொண்டு வந்திருந்தனர். ஓரிருவர் மேல் துண்டில் பணத்தைச் சுருட்டி எடுத்துக் கொண்டு சென்றனர்.

அவர்கள் சென்ற சிறிது நேரத்துக்கெல் லாம் கதவைத் தட்டாமல் திறந்து கொண்டு இரண்டு பெண்கள் உள்ளே நுழைந்தனர். திடுமென, மல்லிகை மணமும், இன்ன தென நிர்ணயித்துச் சொல்ல முடியாத சுகந்த மணமுமாய் அறை வாசனைகளால் சுழ்ந்தது.

கூடலையே வெறிக்கப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருந்தாள் விநோதினி. வட்ட வடிவமான மேசையின் எதிரில் தலை கவிழ்ந்தவாறு இருந்தான் கிருஷ்ணமூர்த்தி. கடல் இரைந்து கொண்டிருந்தது. காற்று, குழந்தையின் சுவாசம் போல் மிகச் சீராக வந்து கொண்டிருந்தது.

அவன் வெயிட்டரைக் கூப்பிட்டு ஏதோ சொன்னான்.

''என்னவோ சொல்ல வேண்டும் என்று அழைத்தீர்கள். பேசாமலேயே இருக்கிறீர் களே....'' என்றாள் விநோதினி.

உணவு மேஜையின் மேல் விரல் நகத்தால் கீறிக் கொண்டே அவன் சொன்னான்.

''ஒரு தவறு நிகழ்ந்து விட்டது.''

''தவறு ஒன்றுதானா நிகழ்ந்தது? தவ றுக்கு மேல் தவறாக அடுக்கடுக்காக அல்லவா செய்து கொண்டிருக்கிறீர்கள். சரி, சொல்லுங்கள்.''

''வட்ட, மாவட்டச் செயலாளர்களைச் சந்திப்பதற்காக ராமசாமி ஹோட்டலில் அறை போட்டார். எல்லோரும் வந்திருந் தார்கள். பேசினோம்...''

அவனை வெட்டிக் கொண்டு அவள் சொன்னாள்.

''குடித்துக் கும்மாளம் போட்டீர்கள்.''

அவன் தலை அசைத்தான்.

''அன்றுதான் முதன் முதலாகக் குடித்தீர் களா?''

''சத்தியமாக அன்றுதான் முதன் முத லாகக் குடித்தேன். ராமசாமிதான் சொன் னார். பீர்தானே, பரவாயில்லை. சும்மா குடி யுங்கள். மயக்கம் வராது என்று. தவிரவும் சபையில் நான் மட்டிலும் குடிக்காமல் இருந் தால் நன்றாக இருக்காதே என்று...''

அவள் கை தட்டினாள்.

''அப்புறம், அப்புறம்...'' — தயங்கினான் கிருஷ்ணமூர்த்தி.

''சல்லாபமா?''

அவன் தலை கவிழ்ந்தான்.

''சொல்லுங்கள்... இவற்றைச் சொல்லத்

---

''வேலை நேரத்துல யாரும் சேர்ல உட் கார்ந்து தூங்கக் கூடாதுன்னு மானேஜர் சொன்னதுக்காக இப்படியா...!''

— மயிலாடுதுறை ஸ்வாமி.

---

தானே என்னைக் கூப்பிட்டீர்கள்.''

''இரண்டு பெண்கள் வந்தார்கள். மாநிற மாய் ஒருத்தி. பெயர் மனோன்மணியாம். இரண்டாவது சிவப்பாய், ரொம்பச் சின்னப் பெண்ணாய், கல்லூரி மாணவி போல் இருந்தாள். பெயர் வனிதா என் றாள்...''

''சரி... அப்புறம்..''

அவன் அமைதியாய் இருந்தான்.

''சத்தியமாக அன்றுதான் முதன் முதலில் இதை அனுபவித்தீர்களா? ராமசாமி சொல் லியிருப்பார். 'பெண்தானே, பரவாயில்லை. சும்மா அனுபவியுங்கள். எந்தத் தவறும் வராது' என்று. தவிரவும் சபையில் நீங்கள் மட்டிலும் இதைச் செய்யாமல் இருந்தால் நன்றாக இருக்காதே என்று...''

அவன் சிறுத்துப் போனவனாய் இருந் தான்.

''சரி... காப்பி ஆறிப் போகிறது, சாப் பிடுங்கள்.''

''மிஸ்டர் கிருஷ்ணமூர்த்தி, நான் என் அம்மாவை விட்டு வெளியேறி விட்டேன். உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியாதே. கோகிலா என்னிடம் இது பற்றி ஒன்றும் சொல்லவில்லையே.''

''நாங்கள் இது பற்றி வெளியில் யாரிடமும் எதுவும் பேசுவதில்லை என்று முடிவு செய்திருக்கிறோம்.''

''என்னிடம் கூட நீங்கள் இது பற்றி எதுவும் சொல்லவில்லையே?''

''என்னிடம் கூட என்பதற்கு நீங்கள் எனக்கு யார்? உங்களுக்குச் சபை இருக்கிறது. மது, மாது அப்புறம் ஆகாயப் பயணம். மாவட்டச் சுற்றுப் பயணம். உங்களை நான் எங்கு வந்து சந்திப்பேன். ஹோட்டலிலா? அது என்னால் முடியாதே. பத்து ரூபாய் மல்லிகைப் பந்தைத் தலையில் வைத்துக் கொண்டல்லவா நான் அங்கு வர வேண்டும். வரலாமா?''

''விநோதினி...''

''ஏன். அந்தக் கல்லூரி மாணவி போல் இருக்கிற, சிவப்பாய் இருக்கிற வனிதா வருகிற இடத்துக்கு நான் வரக் கூடாதா?''

''இப்படியெல்லாம் பேசாதீர்கள் விநோதினி.''

''சரி. ஏன் என் அம்மாவை விட்டுப் பிரிந்தேன் என்று என்னைக் கேட்கவில்லையே?''



''சொல்லுங்கள்.''

''என் அம்மா செய்கிற காரியங்கள் எனக்குப் பிடிக்கவில்லை, கிருஷ்ணமூர்த்தி. ஒரு தாய் என்கிற முறையில், அவள் ரொம்ப உயர்ந்தவள்தான். என் மேல் அவள் வைத்திருக்கும் அன்பு, ஒப்பற்றது. அத்தனை அவமானங்களைச் சுமந்து கொண்டு, ஒரு காசுக்கும் பயனற்ற அப்பாவையும் வைத்துக் கொண்டு அவள் என்னை வளர்த்த பாடு இருக்கிறதே, அதை வார்த்தைகளால் சொல்ல முடியாது. நான் அவளுக்கு ஏழேழு ஜென்மத்துக்கும் கடன்பட்டிருக்கிறேன். ஆனால் கிருஷ்ணமூர்த்தி, என் ரத்தத்தில் அவள் எனக்குப் புகட்டிய பால் ஓடினாலும், அவள் ஊட்டிய சோறு ஓடினாலும், அவள் என் மேல் காட்டிய அன்பு ஓடினாலும், தவறுகளை என்னால் சகித்துக் கொள்ள முடியவில்லை. தவறு செய்கிறவர் என் அம்மாவாகவே இருக்கட்டும். என்னால் அதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. தவறு செய்கிற அம்மாவின் பக்கத்திலேயே இருந்தால், நான் அதைக் கண்டிக்க வேண்டியிருக்கும். தேவையான அளவுக்குக் கண்டித்தாகி விட்டது. என் எண்ணம் என்ன என்பது அவளுக்குத் தெரியும். அவளால் அதை விலக்க முடியாது. தவறுகளைத் தவறு என்று கருதாத நிலைக்கு அவள் போய் விட்டாள். ஆகவே, நான் அவளை விட்டு வெளியேறுவது என்ற முடிவுக்கு வந்தேன்...''

உள்ளங்கையே அளவான கைக்குட்டையால் கண்ணைத் துடைத்துக் கொண்டாள் விநோதினி.

''கோகிலா அப்படி என்ன தவறு செய்தார், பெரிதாக?''

''நீங்களும் அரசியல் அழுக்குக் குட்டையில் ஊறிய மட்டைதானே, கிருஷ்ணமூர்த்தி. எதைத் தவறு இல்லை என்கிறீர்கள்? மக்காச் சோளத்தை மகத்தான உணவு என்பது போல் மாயையை உருவாக்கி, ஒரு வியாபாரி சோள மாவைக் கரைத்து பானம் செய்து விற்கிற வியாபாரத்துக்குத் துணை போய், கொள்ளை லாபம் கமிஷனாகப் பெற்றீர்களே. அது தவறு இல்லையா? நெல்லும் கரும்பும் பயிரிட்டுக் கொண்டு இருந்த விவசாயிகளின் அமைதியைக் கெடுத்து, அவர்களுக்குப் பணம் கொடுத்துக் கடன்காரர் ஆக்கி, அவர்களின் சுதந்திரத்தையும் கெடுத்ததோடு, நெல் உற்பத்தியைக் குறைத்து, அடுத்த மாநிலத்தில் தமிழகத்தைக் கை ஏந்த வைத்தீர்களே, அது தவறு இல்லையா? ஏழை விவசாயிகளின் வயிற்றில் அடித்து, குறைந்த விலைக்கு நிலம் வாங்கி அந்நிய நாட்டுக் கம்பெனிக்கு விற்றுக் கோடிக்கணக்கில் பணம் பண்ணினீர்களே, அது தவறு இல்லையா? அரசியலை, ஒழுக்கசீலர்கள் கையில் இருந்து பிடுங்கி, அற்பர்கள், குடிகாரர்கள், ஸ்திரீலோலர்கள் கையில் ஒப்படைத்திருக்கிறீர்களே, அது தவறு இல்லையா? ...இந்தப் பாவங்களில் எல்லாம் பங்கு கொள்கிற ஒருத்தியோடு — அவள் பெற்றவளாகவே இருக்கட்டுமே. என்னால் எப்படிச் சேர்ந்து வாழ முடியும்? சொல்லுங்கள்!''

அவள் தலைகவிழ்ந்தவாறு மணலில் கால் புதைய நடந்து வந்து கொண்டிருந்தாள்.

அவன் கேட்டான்.

''விநோதினி... நீங்கள் சொல்கிற எல்லாத் தவறுகளிலும் நானும் பங்கு கொண்டிருக்கிறேனே. என்னையும் நீங்கள் பிரிவீர்களா?''

விநோதினி அப்படியே அந்த மணலில் அமர்ந்தாள். தன் கால்களின் மேல் முகத்தைப் புதைத்துக் கொண்டு அவள் தழுதழுக்கும் குரலில் சொன்னாள்.

''என்ன பண்ண கிருஷ்ணமூர்த்தி. நான் உங்களை நேசிக்கிறேனே. நான் யாரையெல்லாம் நேசிக்கிறேனோ, அவர்களைப் பிரிய வேண்டுவது என் விதியாய் இருக்கிறதே. நான் என்ன செய்ய?''

மிகுந்த மனவேதனையோடு விநோதினியின் தோள்களைப் பற்றினான் கிருஷ்ணமூர்த்தி.

(தொடரும்)



* பயிற்சி வகுப்புகள்

* நடுநிலை எங்கே!

புகும்; மனசில் தங்காது! அதனால் சமயத்துக்குக் கைகொடுக்காது!

* **தங்கள் கனி, சென்னை — 18.**

? **ஜனவரி 28, மார்ச் 25 — விஞ்சியது எது?**

! அநாகரிகத்தில் இருபத்தைந்து இருபத்தெட்டை விஞ்சியது என்றால் காரணம், அன்று வெளிப்பட்ட துச்சாதனத்தனம்.

* **சே. சீனிவாசன், கும்பகோணம்.**

? **த. மு. மு. தலைவர் சிவாஜி என்ன செய்கிறார்?**

! வெந்த புண்ணுக்குக் களிம்பு தடவிக் கொண்டிருக்கிறார்; நீர் எதற்கு வேல் பாய்ச்ச நினைக்கிறீர்!

* **அர. மணிவண்ணன், சென்னை — 16.**

? **'சபாநாயகர் நடுநிலையாளராக இருந்தால், அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகத்தை மருத்துவமனையில் சென்று பார்த்தவர், என்னையும் மருத்துவமனையில் வந்து பார்த்திருக்க வேண்டும்' என்று ஜெயலலிதா கூறியுள்ளாரே?**

# எம்.எல்.ஏக்களுக்குப் பயிற்சி வகுப்புகள் நடத்த வேண்டுமா?

* **எஸ். சஞ்சீவிதாஸ், புதுக்கோட்டை.**

? **அணுகுண்டு, அணுமின் நிலையம், ஆதரிப்பீரா, எதிர்ப்பீரா?**

! அணுகுண்டு—கண்ணை மூடிக்கொண்டு எதிர்க்க வேண்டிய விஷயம். அணுமின் நிலையம் — கண்களை நன்கு திறந்து வைத்துக் கொண்டு ஆதரிக்க வேண்டிய விஷயம்!

* **ஜி. ஜெயராமன், கூந்தலூர்.**

? **நீங்கள் சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் அவஸ்தைப்பட்ட விஷயம் ஏதேனும் உண்டா?**

! மனசிலே வைத்துக் கொண்டு நானும் துக்கப்பட்டுப் பிறரையும், 'என்னடா இது, இப்படி இருக்கானே, இவனுக்கு என்ன வந்து விட்டது?' என்று கவலைப்பட வைப்பதை விட, சொல்ல வேண்டியதைச் சொல்லி விடுவதே மேல் என்பது என் அனுபவம். ஆனால் ஒன்று. சொல்லி முடித்த பிறகு தொடர்ந்து சம்பந்தப்பட்டவருடன் சகஜமாக இருக்க வேண்டும். நடந்து போனதை நினைத்து நினைத்து விரிசலை மனத்தில் வளர்த்துக் கொண்டிருக்கக் கூடாது.

* **அ. ஜமால் மொய்தீன், சென்னை.**

? **எம். எல். ஏக்களுக்குப் பயிற்சி வகுப்புகள் நடத்த வேண்டும் என்ற சபாநாயகரின் யோசனை குறித்து?**

! அதுதான் தினம் ஒரு திருக்குறள் கூறி விளக்கம் தருகிறாரே, தமிழ்க்குடி மகன். அது போதாதா? திருக்குறளில் சொல்லப்படாத எதை, பயிற்சி வகுப்பு போதிக்கப் போகிறது? சில பேருக்குப் பாடம் மூளையில் குடி



* களிம்பு பூசுகிறார்...

* தமிழை வளர்க்க..



* ராஜினாமா தேவை!

! அதேபோல் நடுநிலையாளராக விளங்க வேண்டியது மத்திய அரசும்தான். மத்திய அரசு அமைச்சர் இங்கே வந்த போது, ஜெயலலிதாவைமட்டும்பார்த்தவர், அமைச்சரைப் போய்ப் பார்க்கவில்லையே? நடுநிலை என்பது இதுபோன்ற அற்ப அம்சங்களின் அடிப்படையில் கணிக்கப்படுவது அல்ல.

* **பி. சரவணன், சிலநாயக்கன்பட்டி.**

**? இலக்கியம், இலக்கணம் — விளக்கம் கொடுங்கள்?**

! இலக்கியம் பெண் எனில் இலக்கணம் காதல் போன்றது. இலக்கியம் குதிரை எனில் இலக்கணம் கடிவாளம் மாதிரி. இலக்கியம் வாழ்க்கை எனில் இலக்கணம் ஒழுக்கம் சார்ந்தது. இலக்கியம் ரயில் எனில் இலக்கணம் தண்டவாளங்கள். இலக்கியம் ஆளும் கட்சி எனில் இலக்கணம்... அட இழவே, இதிலும் அரசியலா... வேண்டாம் அடிக்க வராதீங்க... நிறுத்திக்கறேன்!

* **கே. சி ரகுநாத், சென்னை — 2.**

**? மின்சார ரயிலில் புல்லாங்குழல் இசையை ரசித்த அனுபவம் உண்டா?**

! வடக்கே ஒரு முறை ரயில் பயணம் செய்யும் போது தனி மனித 'ஆர்க்கெஸ்ட்ரா' வையே கேட்டு வியந்திருக்கிறேன். அந்த வியப்பில் நான் தந்த முழு ரூபாய் நாணயத்தைப் பார்த்து அந்தக் கலைஞரும் அதிசயித்திருக்கிறார். பம்பாயில் புறநகர்ப் பகுதிகளிலிருந்து மின்சார ரயிலில் வந்து போகிறவர்கள், ஆபீஸ் நேர நசுக்கும் நெரிசலினிடையிலும் ஜன்னலில் சாமி படம் மாட்டி, பஜனை செய்வார்கள். சுண்டல் விநியோகம் கூட உண்டு! இன்னொரு பக்கம் உட்கார இடமின்றி நின்றபடியே சீட்டுக் கச்சேரியும் நடக்கும்!

* **கே. ஆர். பவானி, கும்பகோணம்.**

**? தற்போது நாம் தமிழைக் காப்பதில் அதிக ஆர்வம் காட்ட வேண்டுமா? தமிழை வளர்ப்பதிலா?**

! இரண்டுமேதேவைதான். 'தமிழை அதன் தூய்மை கெடாமல் காப்பாற்றுகிறேன்' என்று கூறுபவரிடமிருந்தும், 'தமிழைவளர்க்கிறேன்' என்று சொல்லிக் கலைச் சொல் ஆக்கத்தில் இறங்கி, தலைகாணிப் புத்தகங்களைத் தயாரித்துக் கொண்டிருப்பவரிடமிருந்தும் தமிழைக் காப்பாற்றியாக வேண்டும்! சமீபத்தில் ந. சஞ்சீவி அவர்கள் படத்தை சென்னை பல்கலைக் கழகத்தில் திறந்து வைத்த முதல்வர் கூடத் "தமிழை வளர்க்க வேண்டும்" என்று கூறியிருக்கிறார். ஆனால் எப்படி வளர்ப்பது? நவீன விஞ்ஞான யுகத்துக்கு ஏற்பத் தமிழை வேகமாக வளர்க்க இரண்டு வழிகளே உள்ளன. ஒன்று, கல்லூரிகளில் விரிவுரையாளர்களும் பேராசிரியர்களும் ஆங்கில விஞ்ஞானப் புத்தகங்களை வைத்துக் கொண்டு, தமிழில் விளக்க வேண்டும். இரண்டு, கலைச் சொற்களை மொழி பெயர்த்துக் கொண்டிராமல் ஒலி மாற்றம் செய்து தைரியமாகப் பிரயோகிக்க வேண்டும். அப்போது தமிழ், மற்ற உலக மொழிகளுடன் போட்டி போட்டுக் கொண்டு வெகு வேகமாக வளரும். இல்லையெனில் குண்டு சட்டியில் குதிரை ஓட்டுகிற கதைதான்!

* **அம்புஜம் நாராயணன், சென்னை — 40.**

**? நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டுள்ள தாக்கர் கமிஷன் அறிக்கை தவன் மீது பல சந்தேகங்களைக் கிளப்புவதாக உள்ளதே?**

! அவரோடு வேறு சிலரைப் பற்றியும் ஐயப்பாடுகள் தெரிவிக்கப்பட்டுள்ளன. அரசு நடத்திய ரகசியப் புலன் விசாரணையில் தவன் மீது இருந்த சந்தேகங்கள் துடைக்கப்பட்டு விட்டதாக அரசு கூறுகிறது. இதை முழுசாக ஏற்பதற்கில்லை. தாக்கர் கமிஷனின் சந்தேகத்துக்கு உள்ளாகியிருப்பவர்களின் ராஜினாமாவைக் கோருவதுதான் அரசுக்கு உள்ள ஒரே கௌரவமான வழி.

* **க. சரவணகுமார், தூத்துக்குடி.**

**? தமிழக பட்ஜெட் பற்றித் தங்கள் கருத்து?**

! அன்று நடந்த கலாட்டாவில் பட்ஜெட் பற்றியே பலரும் மறந்து விட்டனர்! உண்மையில் 'வரி விதிப்பு' மின் கட்டணங்களை உயர்த்தியபோதே ஆரம்பமாகி விட்டது. பட்ஜெட்டில் பெட்ரோல் விலை ஏறியுள்ளது. இன்னும் சில சுமைகள் ஏற்றப்பட்டிருந்தாலும் பற்றாக்குறை விழாமல் பட்ஜெட்டைத் தயாரிக்கப் பல ஆண்டுகளுக்குப் பின் முதல் முறையாக முயற்சி எடுக்கப்பட்டுள்ளது வரவேற்க வேண்டிய விஷயம். தொழிலகங்களுக்கு, ஆளுனர் ஆட்சியில் அறிவிக்கப்பட்ட சலுகைகள் நீடிக்கும் என்பது நற்செய்தி.

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**கே. ஆர். பவானி,**
**23, பழனி ஆண்டவர் சன்னதி,**
**கும்பகோணம்**
**— 612 001.**



* "ஆசிகளுக்கு அதிகமாகச் செயலிலும் இறங்குங்கள்!"

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI
ராஜ்மோகன் காந்தி

**13**

# மனிதகுலத்தின் சார்பாக...

சில காலமாக அணுகுண்டு சோதனைகள் நின்று போயிருந்தன. இந்த நல்ல சூழலைக் குலைக்கும் விதமாக 1961 — இல் ஒரு பிரும்மாண்டமான — 50 மெகா டன் — அணுகுண்டை வெடித்து, ருஷ்யா சோதனை செய்தது. இந்தியா இதனைக் கண்டிக்கும் வகையில் ருஷ்யாவுடன் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டு அதனை ஒதுக்கி விட வேண்டும் என்று ஸி. ஆர். அறிக்கை விட்டார். நேரு இதனை ஏற்கவில்லை.

ருஷ்யர் சோதனைக்குப் போட்டியாக அமெரிக்காவும் பஸிஃபிக் மாகடலில் ஒரு சோதனை நிகழ்த்தப் போவதாக அறிவித்தது. தத்துவ ஞானி பெர்ட்ரண்ட் ரஸ்ஸல், நேருவுக்கு காந்திய வழியில் ஒரு யோசனை சொன்னார். சோதனை நடக்கப் போகும் இடத்துக்கு இந்தியா ஒரு கப்பலை அனுப்ப வேண்டும் என்பதுதான் அந்த யோசனை. ஜெயப்பிரகாஷ் இதற்கு ஆதரவு தந்தார். ஸி. ஆர். இன்னும் ஒரு படி மேலே சென்று, கப்பலில் செல்லவிருக்கும் சத்தியாக்கிரகிகளுள் ஒருவராகத் தாம் இருக்க விரும்புவதாகத் தெரிவித்தார். ஆனால் நேரு இந்த யோசனையையும் ஏற்கவில்லை.

சிலதினங்களில்காந்தி அமைதிநிறுவனம் தில்லியில் ஒரு மாநாடு நடத்தியது. உலக நாடுகள் யுத்த தளவாடங்களைக் குவிக்கக் கூடாது, குறைக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகிற மாநாட்டில், அணு ஆயுதச் சோதனைகள் பற்றிய கவலை முதலிடம் பெற்றதில் வியப்பில்லை. இந்த மாநாட்டில் நேருஜி, ராஜாஜி, பிரசாத், ராதாகிருஷ்ணன், ஜெயபிரகாஷ், ஜாகிர் ஹுசைன் போன்ற பெருந்தலைவர்கள் கலந்து கொண்டனர். அப்போது பெர்ட்ரண்ட் ரஸ்ஸலின் யோசனையை இந்தியா ஏற்காமல் போனது தமக்கு வருத்தமளிப்பதாக ஸி. ஆர். குறிப்பிட்டார். காந்தி அமைதி நிறுவனத்தின் தலைவர் திவாகர், மாநாட்டுக்கும் தலைவராக இருந்தார். அவர் பந்தை ராஜாஜி பக்கமே திருப்பி விட்டார். அணு ஆயுதச் சோதனைகளில் சம்பந்தப்பட்டிருக்கும் உலகத் தலைவர்களை அதனைக் கைவிடுமாறு வற்புறுத்தும் பொறுப்பை ராஜாஜி ஏற்க வேண்டும்; இதற்காக அவர், தம்முடன் இன்னும் ஓரிருவரை அழைத்துக் கொண்டு அந்நாட்டுத் தலைவர்களைக் காந்தி அமைதி நிறுவனம் சார்பாகச் சந்திக்கப் போக வேண்டும் என்று யோசனை தெரிவித்தார்.

ஸி. ஆர். இரு நிபந்தனைகளுடன் சம்மதம் தெரிவித்தார். முதலாவது, இத்தகைய தூதுக் குழுவுக்கு இந்திய அரசின் ஆதரவு இருப்பதாக அறிவிக்க வேண்டும். இரண்டாவதாக, அயல் நாடுகளில் தாம் இருக்கும் போது உள்நாட்டு விவகாரங்களைத் தாம்

* "மானுடத் தன்மையை வளர்த்த சந்திப்பு."



பேசாவிட்டாலும் பத்திரிகையாளர்கள் கேள்விக் கணைகளைத் தொடுக்கக் கூடும். அப்போது பதில் கூறாமல் தம்மால் நழுவ முடியாது; மௌனம் சாதிக்கவும் முடியாது. இது நேருஜிக்குச் சங்கடத்தை அளிக்கும் என்றால் தாம் போகாமலே இருந்து விடுவ தாகக் கூறினார்.

நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டு சம்ம தம் தெரிவித்தார் நேரு. ஆனால் பொறுப்பை ராஜாஜியே முழுவதும் சுமக்க வேண் டாம்; ருஷ்யாவுக்கு யு. என். தேபர் (முன் னாள் காங்கிரஸ் தலைவர்) செல்லட்டும் என்று கூறிவிட்டார்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் னால் ஸி. ஆர். தில்லியில் இருந்த போது குளிருக்குப் பயன்படுத்திய கம்பளி ஓவர் கோட்டு தேடிக் கண்டுபிடிக்கப்பட்டு டிரை—கிளீனிங்குக்குப் போய் வந்தது! வேஷ்டி கட்டிக் கொண்டு போனால் குளிர் தாங்க முடியுமா? கம்பளித் துணியில் 'பாண்ட்' தைத்துக் கொள்வாரா? ஸி. ஆர். வேஷ்டி யையே பஞ்சகச்ச மடிப்புடன் 'பாண்ட்' போலத் தைத்து விடச் சொன்னார்! குளி ருக்கு அடக்கமாக அதன் உள் பக்கம் கம்பளித் துணியில் 'லைனிங்' கொடுக்கச் செய் தார்!

1962 — செப்டம்பர். திவாகர், சிவராவ், ராஜாஜி ஆகியோருடன், ராஜாஜியின் வயது மற்றும் அவர் வகித்து வந்துள்ள பதவி கள் காரணமாக, டாக்டர் ஸி. சத்யநாரா யணா அவரைக் கவனித்துக் கொள்ள உடன் அனுப்பப்பட்டார். நேருவின் அறிவுரைப் படி காந்தி அமைதி நிறுவனத்தின் தலைவர் திவாகரே தூதுக் குழுவின் தலைவரானார். ராஜாஜி அக்குழுவின் பிரதான பேச்சாளர்!

கென்னடியுடன் சந்திப்பு இருபத் தைந்து நிமிஷங்கள் நீடிக்கும் என்று முன் கூட்டியே தூதுக்குழுவுக்குத் தெரிவிக்கப் பட்டிருந்தது. அப்போது என்ன நடந்தது என்பதை உடனிருந்த இந்தியத் தூதர் பி.கே. நேரு எழுதியிருக்கிறார்:

''நாங்கள், அமைச்சரவை கூடுகிற அந்த அறையில் ஜனாதிபதியின் வருகைக்காகக் காத்திருக்க அமர்ந்தோம். உட்கார்ந்த மறு கணமே எதிர்ப்பக்கம் ஒரு கதவு திறந்தது. இளைஞர் ஒருவர் சுறுசுறுப்பாக நடந்து வந்து எல்லார் கரங்களையும் பற்றிக் குலுக் கினார். எங்களைப் பக்கத்தில் இருந்த இன்னோர் அறைக்கு அழைத்துப் போனார். காமிராக்கள் ஒளிசிந்தின. டெலிவிஷன் காமிராக்கள் சுழன்றன.

ராஜாஜி, தம்மைவிடப் பன்னிரண்டு அங்குலம் உயரமான, தமக்கு இடது பக்கம் இருந்த இளைஞரை ஏறிட்டுப் பார்த்து, "நான் அமெரிக்க ஜனாதிபதியின் சமூகத் தில் இருக்கிறேனா?'' என்று கேட்டார். புகைப்படக்காரர்கள் படங்கள் எடுக்க ஆரம் பிக்கும் வரை, தங்களைக் கரம் குலுக்கி அழைத்து வந்திருக்கும் நபர் அமெரிக்க ஜனாதிபதி கென்னடியேதான் என்பதை ராஜாஜி உணர்ந்திருக்கவில்லை! கென்னடி யின் எளிமை அப்படி அவரை 'மயக்கி விட்டது!''

கென்னடி தமக்கு மிகவும் பிடித்த மான ஆடும் நாற்காலியில் அமர்ந்தார். திவா கரும் சிவராவும் அவருக்கு வலப்புறமும், ஸி. ஆரும் பி.கே. நேருவும் இடப்புறமும் அமர்ந் தனர். அமெரிக்கா யுத்த தளவாடங்களைக் குறைக்க வேண்டும் என்று வாதாடத் தாம் வரவில்லை என்று ஆரம்பித்தார் ராஜாஜி.

''என்னுடைய அரசே நாட்டின் பாதுகாப்புக் காகப் போர் ஆயுதங்களைப் பயன்படுத்தும் கொள்கையைக் கொண்டிருக்கும் போது அவ்வாறு நான் வாதாட முடியாது. ஆனால் அணு ஆயுதச் சோதனைகளை உடனடியாக நிறுத்த வேண்டும் என்ற கோரிக்கை முற்றி லும் வித்தியாசமானது. அணு ஆயுதச் சோதனை என்ற பெயரில் உலகச் சூழலை விஷமயமாக்கும் உரிமை வல்லரசுகளுக்குக் கிடையாது என்று சொல்ல உலக நாடுக ளுக்கு உரிமை உண்டு. இப்படிச் சுற்றுச் சூழலை விஷமயமாக்குவது இந்தத் தலை முறைக்கு மட்டுமின்றி எதிர்காலத் தலை முறைக்கும் பேராபத்துக்களை விளைவிப்ப தாகும். இவ்விஷயத்தில் அமெரிக்காவும் ருஷ்யாவும் ஓர் ஒப்பந்தத்துக்கு வருவது கடினமல்ல. ஒப்பந்தம் ஏற்படாவிட்டாலும் அமெரிக்கா, தார்மீக அடிப்படையில் ஒரு தலைப்பட்சமாக அணு ஆயுதச் சோதனை களைக் கைவிட்டுவிட வேண்டும். இவ்வாறு மிகுந்த தைரியத்துடன் முதலடியை அமெ ரிக்கா எடுத்து வைக்க வேண்டும் என்று உலகம் ஆர்வத்துடன் எதிர்பார்க்கிறது. அமெரிக்கா இதைச் செய்தால் அதனைப் பின்பற்றாமலிருப்பது ருஷ்யாவுக்குக் கடின மாகிப் போகும்....''

ராஜாஜியின் வாதத்திறன் குறித்துத் தூதர் பி. கே. நேரு எழுதுகிறார்:

''உலகத் தலைவர்கள், பெரிய மனிதர் கள் பலர் தங்கள் கருத்துக்களை எடுத்துக் கூறி வாதம் புரிவதைப் பல சந்தர்ப்பங்களில் அருகில் இருந்து கவனிக்கும் அதிர்ஷ்டம் எனக்கு இருந்திருக்கிறது. ஆனால் ராஜாஜி போல் அத்தனை தெளிவான வாதங்களை, வார்த்தைகளில் சிக்கனம் காட்டி, பொருத்த மான சொற்களைத் தேர்ந்தெடுத்து, மிருது வான முறையில், மறுக்க முடியாத உண்மை களைப் பேசிய ஒரு மனிதரை நான் பார்த்த தேயில்லை! கென்னடியிடம் ஏற்பட்ட எதிர்விளைவுகளைக் காண்பதுமிகவும் சுவா ரஸ்யமாக இருந்தது. தேய்ந்து மெலிந்த ஒரு மனிதர், முற்றித் தேர்ந்த முறையில் தமது வாதங்களைச் சமர்ப்பிப்பதைக் கண்டு, வியந்து போற்றும் விதமாகக் கென்னடியின் கண்கள் அகல அகல விரிந்து கொண்டே போயின!''

சிவராவ் பின்வருமாறு எழுதியிருக்

கிறார்:

"எங்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்த இருபத்தைந்து நிமிடங்களைக் கடந்து நேரம் சென்று கொண்டேயிருந்தது. கென்னடியின் இதர அலுவல்கள் தாமதமாகிக் கொண்டிருக்கின்றன என்பதை நினைவூட்டும் குறிப்புச் சீட்டுக்கள் அவருக்கு வந்து கொண்டேயிருந்தன. ஜனாதிபதி அவை எல்லாவற்றையும் ஒதுக்கி அலட்சியம் செய்தார். இந்தியாவிலிருந்து தம்மைக் காண வந்திருக்கும் மூதறிஞரின் யதார்த்த அறிவு அவரை முழுமையாக ஆட்கொள்ள, அவர் முகம் ஒளி பெற்றுத் திகழ்ந்தது."

"உங்களுடைய கோரிக்கைகள் நியாயமானவை என்பதை நான் உணர்கிறேன்" என்று கென்னடி இறுதியாகச் சொன்னார். "அவற்றுள் எவை காரிய சாத்தியமானவை என்பதை நிச்சயமாக ஆராய்ந்து பார்ப்பேன். அணு ஆயுதச் சோதனைகள் அதிகரித்துக் கொண்டே போவதில் உள்ள அபாயங்களை நான் உணர்ந்திருக்கிறேன். அடிப்படையான பிரச்னை, வல்லரசுகள் ஒருவரை ஒருவர் நம்ப முடியாமல் இருப்பது தான். இந்த நம்பிக்கை வளர ஏதாவது செய்யப்பட வேண்டும்."

பேட்டியின் இறுதிக் கணங்களில் ஸி. ஆர். சொன்னார்: "அணு ஆயுதங்கள் விலக்கப்பட்டால் யுத்தங்களின் தன்மையே மாறி விடும். உலகமே அழிந்துவிடக் கூடிய அபாயம் நீங்கும். இதுதான் இன்று உலக மக்களுக்கு உள்ள மிகப் பெரிய கவலை."

ஒரு மணி நேரத்துக்கு மேல் அவர்கள் கென்னடியுடன் இருந்தனர். அவர்கள் விடைபெற்றுச் சென்ற பிறகு கென்னடி, பிலிப்ஸ் டால்பாட்டிடம் கூறினார்: "ஒரு வழக்கை இத்தனை தெளிவாகவும், கச்சிதமாகவும் அழகிய மொழி நடையிலும் யாரும் வாதாடி நான் இதுவரை கேட்டதேயில்லை. ராஜாஜியின் சந்திப்பு மனிதத் தன்மையை என்னிடம் வளர்ப்பதாக அமைந்தது."

"சந்திப்பினால் பலன் உண்டா? பழம் தானே?" என்று ஒரு நிருபர் ராஜாஜியைக் கேட்டார். "பூ மலர்ந்திருக்கிறது; பழம் இனி தோன்றும்" என்றார் ராஜாஜி.

"இரண்டு நாட்களுக்குப் பிறகு நடந்த அமெரிக்க அரசின் அயல்நாட்டு அமைச்சரவைக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட முதல் விஷயம், ஸி. ஆர். கென்னடியிடம் கூறிய கருத்துக்களே" என்று செஸ்டர் பௌல்ஸ் குறிப்பிட்டிருக்கிறார்.

அமெரிக்க விஞ்ஞானிகள், பத்திரிகை ஆசிரியர்கள், செனடர்கள், பேராசிரியர்கள், ஐ. நா. சபை அதிகாரிகள் முதலிய பலரைச் சந்தித்தார் ஸி. ஆர். அவர்களுள், அயல் நாட்டு அமைச்சர் டீன் ரஸ்க், ஐ. நா. வில் அமெரிக்கத் தூதர் அட்லாய் ஸ்டீவன்ஸன், ஐ. நா. காரியதரிசி உதாண்ட், ருஷ்யத் தூதர் குரோமைகோ, பேராசிரியர் கிஸ்ஸிங்கர், அணு விஞ்ஞானி டாக்டர் ராபர்ட் ஒப்பன்ஹைமர், ஐ. நா. தலைவர் ஜஃப்ருல்லாகான் ஆகியோர் முக்கியமானவர்கள்.




**தன் குடும்பத்தினரால் கைவிடப்பட்டு 'அனாதை'யாகிறான் ஒரு சிறுவன். பம்பாய் நகரின் நெரிசலான பகுதியில் திருடர்களுடனும், போதைப் பொருள் விற்பவர்களுடனும், விலை மாதர்களுடனும் விபசார விடுதிகள் நடத்துவோருடனும் அச்சிறுவனுக்கு ஏற்படும் சந்திப்புகளும் நிகழும் அனுபவங்களும்தாம் 'சலாம் பாம்பே' என்ற திரைப்படத்தின் கதை. மீரா நாயர் என்பவரால் இயக்கப்பட்டுள்ள இந்த இந்தியத் திரைப்படம் இவ்வாண்டின் ஆஸ்கார் விருதுக்காக முன்மொழியப் பட்டுள்ளது.**

**(நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ்)**

அமெரிக்காவிலிருந்து பிரிட்டனுக்குச் சென்றார் ராஜாஜி. லண்டனில் பிரதமர் மாக்மில்லன், எதிர்க்கட்சித் தலைவர் கெய்ட்ஸ்கெல், பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் முதலிய பலருடன் பேசினார்.

ரோமாபுரிக்கு வந்து போப்பாண்டவரைத் தரிசித்தார் ஸி. ஆர். "உங்களுடைய முயற்சிக்கு எனது ஆசிகள்" என்றார் போப். நன்றி தெரிவித்த ஸி. ஆர்., "அதற்கு அதிகமாகச் செயலிலும் போப்பாண்டவர் இறங்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். "அணு ஆயுதச் சோதனை நிறுத்தத்துக்குத் தக்க சமயத்தில் போப்பாண்டவர் கோரிக்கை விட வேண்டும்." இருபத்திமூன்றாவது ஜான், இதுபற்றி யோசிப்பதாகக் கூறினார்.

ராஜாஜி தாய்நாடு திரும்பிச் சில காலம் சென்று அணுகுண்டு சோதனைகளுக்கு முடிவு கட்டுமாறு போப்பாண்டவரின் அறிக்கை வெளியானது. ராஜாஜி சிலிர்த்துப் போனார். 1963 ஜூலை இறுதியில் அமெரிக்காவும், ருஷ்யாவும், பிரிட்டனும் அணுகுண்டு சோதனைத் தடைக்கு ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டன. மலர், காயாகிக் கனிந்தும் விட்டது!

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு VII கல்கி, ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் ஆரம்பமாகும்.**

"நான் உங்களை டிஸ்டர்ப் பண்றேன்னு நினைக்கி றேன்... நீங்க ஃப்ரீயா இருக்கிறப்போ கூப்பிடுங்க. நான் வந்து கேஸை எக்ஸ்ப்ளெய்ன் பண்றேன்..."

ஸேல்ஸ் ஆஃபீஸர் மருதநாயகம் சொல்லிக் கொண்டே இருக்கையை விட்டு எழ முயற்சி செய்யவும், திடுக்கிட்ட சிவராஜன் நிலைக்கு வந்தார். மெலிதான புன்னகை அவர் முகத்தில் நெளிந்தது. புன்னகையில் வழக்கமான கம்பீரம் குறைந்து, மன்னிப்புக் கேட்கும் பாவம் தூக்க லாய்த் தென்பட்டது.

"நீங்க என்னமோ யோசிச்சுக்கிட்டே இருந்தீங்க. நான் சொல்றதை ரிஸீவ் பண்ற மூட்லே இல்லேன்னு நினைக்கிறேன்..."

தயங்கித் தயங்கி அவர் சொல்ல, சிவராஜன் தெளி வானார்.

"அதெல்லாம் ஒண்ணு மில்லே... சம் தாட்ஸ். யூ ப்ரொசீட்..."

வாய் சொன்னாலும், மனம் மருதநாயகத்தின் கணிப்பை ஒப்புக் கொண் டது. இப்போதெல்லாம் மனம் அடிக்கடி ஓடிப்போய் விடுகிறது. பிறர் பார்வை, பேச்சு ஆகியவற்றிலிருந்து 'பளிச்'சென்று விலகி, எங் கேயோ இலக்குத் தெரியா மல், ஓடிப் போகிறது. இது என்ன ஓட்டம்? இது நாள் வரை இப்படி இருந்ததில் லையே?

யோகாசனம் செய்யும் போது முன்பிருந்த தீர்க்க மான ஈடுபாடு, சன்னமாய் இழை இழையாகக் குறையத் தொடங்கியதை உணர்ந் தார். தியானம் செய்து



விட்டுக் கண்ணைத் திறக்கிற போது, இருபது நிமிடங்கள் ஓட்டமாய் ஓடிப் போயிருக்கும். கணிக்கவே முடியாத கால இடைவெளியைக் கடந்துவிட்டது மாதிரியான மகத்தான அமைதியும் தெம்பும் வந்து சேரும்.

அதெல்லாம் எங்கே போயின?

மனத்தினைக் கட்டிப்பிடித்து நிலை நிறுத்த முயன்றாலும் முரட்டுக்காளையாய்த் திமிறி, திடும்திடும் என்று கண்களைத் திறந்து, தியானத் தொடர்பினை அறுத்துக் கொண்டு எதன் பின்னரோ ஓடி...

எதன் பின்னால் ஓடுகிறது?

பளிச்சென்று தேவமனோகரி தென்பட்டாள்.

கன்னங்குழியச் சிரித்துக் கொண்டு, அலட்டிக் கொள்ளாமல் ஆங்கிலம் பேசுகிற தேவமனோகரி.

அந்த அலுவலகத்திற்கு வந்தபின் தான், தான் தடுமாறுகிறதாகத் தோன்றிற்று சிவராஜனுக்கு. உள் மனம், வெட்கத்துடன் ஒப்புக் கொண்டது தெரிந்தது.

நாற்பத்தைந்து வயதில், அலுவலகத்தில் ஒரு பெரிய அதிகாரியாக இருந்து கொண்டு தனக்குக் கீழே வேலை பார்க்கிற இருபது இருபத்திரண்டு வயது குமாஸ்தாவிடம், இது என்ன உணர்வு, எந்த வாதத்திலும் ஒப்புக் கொள்ள முடியாமல்? முதல் மனைவி இறந்து பதினெட்டு வருடங்கள் பெண் வாடையே படாமல், மிடுக்காய், துடிப்பாய்ச் செயல்பட்டு, இந்தியாவின் பல கேந்திரங்களில் வேலை பார்த்து விட்டு வாழ்வின் பிற்பகுதியை அமைதியாய்த் தமிழ் நாட்டில் கழிக்கலாமென்று வந்த இடத்தில் இது என்ன விபரீத உணர்வு? காதோரம் நரை வந்த பின்பு, 'எக்ஸிக்யூடிவ் பைஃபோகல்' கண்ணாடிஅணியத் தொடங்கிய பின்பு, காதலுணர்வா? கேட்பவர்கள் சிரிக்க மாட்டார்கள்?

எது எப்படியோ தேவமனோகரியை மனம் நாடுவது நிஜம். அவள் நினைவில் மெய்யுருகுவது சர்வ நிஜம். நாள் நாளாய்க் கரைவது சத்தியம்.

அறிவு பலவிதமாய் எச்சரித்தும் மனம் தவிக்க உருகலானார் சிவராஜன்.

சந்தன நிற சஃபாரியும், ரோல்ட் கோல்ட் பிரேம் கண்ணாடியும், மிடுக்கான நடையுமாய்க் காதோரம் கிளம்பியிருக்கிற நரை கூட ஒரு கவர்ச்சியாய்த் தோன்ற, தன் அறைக்கு வெளியே நின்று பேசிக் கொண்டிருந்த சிவராஜனைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் தேவமனோகரி.

அவரை நினைக்க நினைக்க, நெஞ்சுக் கூட்டுக்குள் மனம் துள்ளிப் படபடக்கிறதை உணர்ந்தாள்.

வேலைக்கு வந்த சில நாட்களிலேயே அவருடன் அடிக்கடி பேச வேண்டிய வாய்ப்பு ஏற்பட்டது அவளுக்கு. ஒவ்வொரு சந்திப்பும், பேச்சும் அவளை அவர்பால்



ஈர்த்ததை உணர்ந்தாள்.

''புது அஸிஸ்டன்ட் ஜெனரல் மானேஜர், ரொம்ப இன்டலிஜன்டாம்... சின்ன வய சிலேயே வொய்ஃப் போயிட்டாளாம்... ரிமாரேஜ் பண்ணிக்காமெ அவ நினைவி லேயே வாழ்ந்திட்டிருக்காராம்... டெல்லி, சண்டிகார் ஆபீஸ்லேல்லாம் வேலை பார்த் திட்டு, மெட்ராஸ் வந்திருக்காராம்.. இங் கேயே ரிடையராகி, ஸெட்டிலாகப் போறா ராம்...''

''எத்தனை குழந்தைகள்...?''

''இல்லியாம்... ரிமாரேஜுக்காக ரொம்ப பேர் ட்ரை பண்ணினாங்களாம்... இடமே கொடுக்கல்லியாம்...''

''கட்டினவனுக்கு ஒரு வீடு... கட்டாதவ னுக்குப் பல வீடுன்னு இருந்துட்டாரோ, என்னமோ?''

''சீச்சீ...! ஜென்டில்மேனாம்... பெண் களைத் திரும்பிப் பார்க்க மாட்டாராம்...''

— அவர் வருவதற்கு முன், அலுவலகத் தில் நிகழ்ந்த சம்பாஷணை அவரைப் பார்க் கும் ஆவலை அவளுள் தூண்டிற்று.

எப்படியிருப்பார்?

'ஐ அம் சிவராஜன். அஸிஸ்டன்ட் ஜெனரல் மானேஜர்'—என்று ஒவ்வொரு இருக்கையாய்ச் சென்று அறிமுகப்படுத்திக் கொண்டவரைப் பார்த்த முதல் பார்வை யிலேயே மனம் இதமாக அவரை அங்கீ கரித்து வரவேற்றது.

அப்புறம் ஒவ்வொரு சந்திப்பையும் வலிய ஏற்படுத்திக் கொண்டு, அவருடன் பேசப் போவாள்.

அவருடன் வாழக் கொடுத்து வைக்காத அவரது மனைவியின் மீது பச்சாதாபம் எழும்.

ஏன் இப்படித் தனியாய் வாழ்ந்து வாழ்க் கையைக் கெடுத்துக் கொள்கிறார்? இவ ரைக் கணவனாக அடைய எவ்வளவு கொடுத்து வைத்திருக்க வேண்டும்? எவ் வளவு இனிய துணைவனாய் இருப்பார்!

துள்ளும் இளமையுடன் பல இளைஞர் கள் இருக்க, அவர்பால் மனம் லயிப்பா னேன்? இது என்ன வேடிக்கை! வெளியில் சொன்னால் சிரிக்க மாட்டார்களோ? 'கிழ வனையா, இரண்டாம் தாரமாகவா?' என்று கேட்டே கொன்று விடுவார்களே!

வயதில் எவ்வளவு பெரியவர்! அவர் மீது காதலா? இதெல்லாம் நடக்கிற காரியமா? சினிமாவென்றால் காட்டி விடுவார்கள்! நிஜ வாழ்வில் இதெல்லாம் சாத்தியமா? ஒரு பெரிய மனிதரின் மனத்தைப் புண்படுத்தி விடுவோமோ?

விலக்க, விலக்க, மனத்துள் அவர் உருவம் விஸ்வரூபம் எடுத்தது. விலக, விலக, அவர் மீதான ஏக்கம், அவளை ஆக்ர மித்தது.

**யா**ர் பார்வையோ தன் மீது வெகு நேரமாய் உறுத்துகிற விதத்தில் படருகிற தாக உணர்ந்த சிவராஜன், விருட்டென நிமிர்ந்து பார்த்தார்.

சமையல்காரர் வேதாத்ரி!

''என்ன, அய்யர்...? என்ன வேணும்...?'' சகஜமாய்க் கேட்க முயன்றார்.

''...காப்பியை வச்சுப் பத்து நிமிஷ மாறது. இடது கையிலே பேப்பர். கண் தோட்டத்துக்கு வெளிலே. மனசு எங் கேயோ மைல் கணக்காப் போயிட்டு வரது... நான் சொல்றேனேன்னு தப்பா நெனைச்சுக்க மாட்டேளே...?''

அய்யர் தயங்கினார். குரல் 'மன்னித்து விடு' என்றது.

''...வயசு இருக்கு. காசு பணம் எல்லாம் இருக்கு; இந்த வீட்டுக்கு ஒரு லட்சுமியை அழைச்சிண்டு வாங்களேன்...''

பளாரென்று கன்னத்தில் அறைந்த மாதிரி உணர்ந்தார் சிவராஜன்.

மனத்துக்குள் இருப்பதை எப்படித் துல்லியமாய், இவரால் சொல்ல முடிந்தது?

தேவமனோகரி, அந்த வீட்டினுள் அடி யெடுத்து வைத்தால் எப்படியிருக்கும்? சுலோகங்களை முணுமுணுத்துக் கொண்டே, தெய்வப் படங்களுக்குப் பூ வைத்தால் எப்படியிருக்கும்? இந்த வீடு முழுவதும் பாதம் தழுவ அவள் இங்கேயே போய் வந்து கொண்டிருந்தால் எப்படியிருக் கும்? இந்த வீடு கோயிலாகி விடாதோ? அவளிடம் கேட்டால் என்ன?

உடலில் புது முறுக்கு ஏற, பத்து வயது குறைந்தாற் போல் உணர்ந்தார். 'இன்று அவளிடம் மனத்திலிருப்பதைச் சொல்லி விட வேண்டியதுதான்' என்று தீர்மானித் ததுமே மனத்தில் ஒரு இதமான படபடப்பு எழுந்தது. 'குளித்து விட்டு அலுவலகம் போனதும் முதல் வேலையாகத் தேவ மனோகரியிடம் பேச வேண்டியதுதான்' என்று எண்ணிக் கொண்டே குளிக்கக் கிளம்பினார். வாய் ஏதோ பாட்டை முணு முணுத்தது.

''...என்ன இன்னிக்கு அபூர்வமா பாட் டுப் பாடறீங்க?'' கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார், பக்கத்து வீட்டு ஞானப் பிரகாசம். கையில் தமிழ்ப் பத்திரிகை யொன்று பாதி பிரிந்த நிலையில் இருந்தது.

''ஞானம் சாரா? வாங்க... உட்காருங்க... அய்யர்...! சர்க்கரை கம்மியா ஒரு காப்பி கொண்டாங்க....''

''தமிழ்ப் பேப்பர்லே என்ன நியூஸ்...?''

''எல்லாம் வழக்கமான அக்கப் போர் தான்... மங்களூர்லே ஒரு இன்ட்ரஸ்டிங் நியூஸ். ஒரு காலேஜ் புரொபஸர். நாப்ப தஞ்சு, நாப்பத்தாறு வயசு இருக்குமாம். தன்கிட்ட ட்யூஷன் படிக்கிற பொண்ணு கிட்ட லவ் லெட்டர் குடுத்திருக்காரு... அது பச்சப்புள்ளே!வாத்தியாரு,பெரியவருன்னு அவர்கிட்ட மரியாதையாப் பழகியிருக்கு... இந்தாளு, அதைத் தப்பா எடுத்துக்கிட்டு 'ஐ லவ் யூ'ன்னிருக்காரு...''

சர்ப்பம் மாதிரி தலைநிமிர்ந்தார் சிவ ராஜன். ''அப்புறம்...?''

''...பெறகென்ன...? அந்தப் பொண்ணு

அழுதுகிட்டே வீட்டுலே பெரியவங்ககிட்டச் சொல்லி, அவுங்க வந்து இந்தாளை மொத்தி எடுத்துட்டாங்க.. இவரு வய சென்ன, அந்தப் புள்ளை வயசென்ன? இந்த நெனைப்பு அந்த வயசுலே வர லாமா...? காலங்கெட்டுப் போயிருச்சு..''

ஞானம் என்கிற ஞானப்பிரகாசம் புறப் பட்டுப் போனார்.

உறைந்துபோய்உட்கார்ந்தார்சிவராஜன்.

என்ன தவறு செய்ய இருந்தோம்? என் வயதென்ன, பொஸிஷன் என்ன? ஆண்ட வனே...! இந்த ஞானத்தைக் கொடுக்கத் தான் ஞானப்பிரகாசத்தைக் காலையில் அனுப்பித்தாயா, ஆண்டவனே...!

'அவர்கிட்ட மனசுலே' இருக்கிறதை எப்படிச் சொல்வது? காதல் கடிதம் எழுத லாமா? வாங்கு வாங்கென்று வாங்கி விட்டால்? நேருக்கு நேர் பேசவும் கூச்சமாய் இருக்கிறது. வேறு யாரும் இதை ரசிக்க மாட் டார்கள். பூடகமாய்ச் சொன்னால் என்ன? ஓர் இளம் பெண், ஒரு நடுவயதுக்காரரைக் காதலித்தால் எப்படியிருக்கும் என்று கேட்டு அவர் ரியாக்ஷனை ஸ்டடி செய்தால் என்ன?'

அந்த யோசனை சரியாகப்படவும் மனத் திற்கு உற்சாகமாக இருந்தது. விரைவாக அலுவலகம் கிளம்பும் ஆயத்தத்தில் இறங் கினாள் தேவமனோகரி.

''...தேவி...! அஹமதாபாத்லே இருக்கிற பையனோட அப்பா லெட்டர் எழுதியிருக் கார். ஜாதகம் பொருந்தியிருக்காம். எம்.பி.ஏ. பாஸ் பண்ணிட்டுப் பையன் எக்ஸிக்யூடிவ்வா இருக்கான். உன் போட் டோவைப் பார்த்து, சரின்னு சொல்லியிருக் கான். அவன் போட்டோ உனக்குப் பிடிச் சிருக்கா...?''

அம்மா சொன்னது எதுவும் காதில் விழ வில்லை. சிவராஜன் நினைவே நெஞ்செல் லாம் நிறைந்திருந்தது. அவசரம் அவசரமாய் அலுவலகம் புறப்பட்டாள் தேவமனோகரி.

'இமைகளைப் பிளந்து கொண்டு வந்து விடுவேன்' என்று கண்ணீர் மிரட் டிற்று. வெலவெலத்துப் போய் நாற்காலி யில் அமர்ந்து கொண்டிருந்தாள் தேவ மனோகரி.

காலையில் எவ்வளவு உற்சாகமாய்ப் போனாள்?

அலுவலகத்தில் நுழைந்ததும் காதில் பட்ட முதல் செய்தியே வயிற்றைக் கலக் கிற்று.

''ஏ.ஜி.எம். சிவராஜன், நாளைலேர்ந்து பத்து நாள் லீவாம். டெல்லிக்கே திரும்பவும் டிரான்ஸ்பர் கேட்டுட்டுப் போறாராம்... ஹெட் ஆபீஸுக்கு லெட்டர் டிக்டேட் பண்ணிட்டாராம்... ஸ்டெனோ சொன் னாள்...''

அடிவயிறு எழும்பி நெஞ்சை அடைத் தது. குரல் வளையை யாரோ நசுக்கின மாதிரி மூச்சுத் திணறிற்று.

நேரில் விசாரிக்கலாமென்று அவர் அறைக்குப் போனாள்.

சரியாய் முகம் கொடுத்துக் கூடப் பேச வில்லை. ''தாங்க்யூ... ஃபார் ஆல் த கோ ஆபரேஷன்..!''என்றார் தலை நிமிர்த் தாமல்.

அவர் குரலில் இருந்த நடுக்கம் ஏதோ ஒன்றை அவளுக்கு உணர்த்தியது போலிருந் தது.

தேவமனோகரியிடமிருந்து ஒரு விசும் பல் வெடித்துக் கிளம்பியது.

பதறிக் கொண்டு எழுந்தார் சிவராஜன்.

''ஏன், ஏன், என்ன ஆச்சு?''

அவள் சமாளித்துக் கொண்டு சொன் னாள்: ''ஒண்ணுமில்லே ஸார், நீங்க டிரான்ஸ்ஃபர் கேட்டுப் போறீங்கன்னு கேள்விப்பட்டதும் தாங்கிக்க முடியலே...''

அவள் வெளியே வந்துவிட்டாள்.

சிலையான சிவராஜன் முன்,சில வினாடி களில், அவர் மாற்றல் கோரி டிக்டேட் செய்த கடிதம் டைப் ஆகி வந்து அமர்ந்தது. கையெழுத்துப் போடாமல் அதை மேஜை இழுப்பறைக்குள் வைத்து மூடினார். அந்த முடிவிலே ஓர் ஆரம்பம் இருந்தது.

அவர்களுடைய காதல் சிற்பம் இனி கல் லுக்குள் உறங்காது. வடிவம் பெறும்.




— கீழை. அ. கதிர்வேல்.

ராஜேஷ்குமார்

# இன்று

விநாடிக்கும் குறைவான நேரம்தான்.

விவேக் குபீரென்று சுபாஷின் மேல் பாய்ந்து இரண்டு கைகளாலும் அவன் கழுத்தைப் பற்றி சயனைட் மாத்திரையை விழுங்க விடாமல் அழுத்தி, பின்னந்தலையில் ஒரு தட்டுத் தட்டினான். மாத்திரை வெளியே சிதற, ஸ்டோர்ஸ் இன்சார்ஜ் ரஞ்சித் கோட்டேயும், ஸ்டீபனும் ஓடி வந்தார்கள். தப்பித்து ஓட முயற்சி செய்த சுபாஷ் முடக்கப்பட்டு, சுவரோரமாய் நிறுத்தப்பட்டான். விவேக் அவனை நெருங்கிக் கன்னத்தைத் தட்டினான்.

"ஸாரி... ப்ரதர்! சாக இன்னமும் உனக்கு அவகாசம் இருக்கு."

அவசர அவசரமாய்க் கமிஷனர் ஹில் அருகே வந்தார்—"மிஸ்டர் விவேக்! இவனை போலீஸ் ஹெட்குவார்ட்டர்ஸுக்குக் கொண்டு போயிடலாம்."

"வேண்டாம் ஸார்... இவனை இங்கிருந்து நகர்த்தி—ஹெட்குவார்ட்டர்ஸுக்குக் கொண்டு போறது ரொம்பவும் ரிஸ்க்... வழியிலேயே இவனுக்கு மோட்சம் கிடைத்து விடலாம்..."

"என்ன செய்யலாம்...?"

"விசாரணையை இங்கேயே வைத்துக் கொள்ளலாம்... ஆனால் விசாரணையில்... இவன் நமக்கு உதவுகிற மாதிரியாய் எதுவும் சொல்ல மாட்டான். இவனிடம் விஷயங்கள் இருக்கிறது. அவற்றைக் கறக்கிற விதத்தில் தான் கறக்க வேண்டும்... சுபாஷின் வீட்டு விலாசம் எனக்கு வேண்டும். மிஸ்டர் ரஞ்சித் கோட்டே! சுபாஷின் வீடு எங்கே இருக்கிறதென்று தெரியுமா...?"

"தெரியும் ஸார்..."

"ப்ளீஸ்..."

"நெம்பர் தர்ட்டி டூ, டாக்டர் சில்வா ரோடு, தாதர்..."

விவேக் கமிஷனரிடம் திரும்பினான். "ஸார்! சுபாஷின் வீட்டை நாம் உடனடியாய்க் கிளறியாக வேண்டும். நான் செக்யூரிட்டி ஃபோர்ஸோடு கிளம்புகிறேன். இவனை நீங்கள் ஹேண்டில் பண்ணுங்கள்."

கமிஷனர் தலையசைக்க, விவேக் சுபாஷை நெருங்கி மெல்லிய குரலில் கேட்டான். "வீட்ல யார் இருப்பாங்க...?"

சுபாஷ் மௌனம் சாதிக்க, ரஞ்சித் கோட்டே குறுக்கிட்டுச் சொன்னார்.

"யாரும் இருக்க மாட்டாங்க ஸார். அந்த வீட்ல சுபாஷ் மட்டும்தான் இருந்துட்டு வந்தார்."

"அப்போ வீட்டுச் சாவியும் சுபாஷ்கிட்டதான் இருக்கும்," — சொன்ன விவேக், சுபாஷின் பேண்ட் பாக்கெட்டுகளிலும் ஷர்ட் பாக்கெட்டுகளிலும் கையை நுழைத்துத் தேட, ஒரு சிகரெட் பாக்கெட், ஒரு கால்குலேட்டர், ரூபாய்த் தாள்களோடு பர்ஸ், ஒரு சாவிக் கொத்து—கைக்குக் கிடைத்தன.

— விவேக் மற்ற பொருள்களைக் கமிஷனர் ஹில்லிடம் ஒப்படைத்து விட்டு, சாவிக் கொத்தோடு கிளம்பினான். ஏர்போர்ட் லௌஞ்சுக்கு வந்தபோது — ரிசப்ஷனிஸ்ட் கையில் ரிஸீவரை வைத்துக்கொண்டு விவேக்கைக் கூப்பிட்டாள்.

"ஸார் உங்களுக்கு போன்."

ரிசப்ஷனிஸ்டை வேகமாய் நெருங்கினான். ரிஸீவரை வாங்கி, "ஹலோ" — என்றான்.

"மிஸ்டர் விவேக்!"

"ஸ்பீக்கிங்."

"ஸார்... நான் இன்ஸ்பெக்டர் கிஷோர்."

"சொல்லுங்க... கிஷோர்."

"'தண்டர்' பத்திரிகையோட சப்ஸ்க்ரிப்ஷன் லிஸ்ட்டை க்ளாஸிபை பண்ணும் போது அன் எம்ப்ளாய்ட் யூத் சில பேர் கிடைச்சிருக்காங்க. அவங்களை விசாரிக்கிறதுக்காக ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்திருக்கேன். விசாரணையை நீங்களே பண்றீங்களா ஸார்?"

"ஸ்டேஷன்ல மொத்தம் எத்தனை பேர் இருக்காங்க...?"

"எட்டு பேர்..."

"விடிகிற வரைக்கும் இருக்கட்டும் மிஸ்டர் கிஷோர்! அந்த சப்ஸ்க்ரிப்ஷன் லிஸ்ட்... இப்போ உங்ககிட்டேதானே இருக்கு...?"

"ஆமாம் ஸார்."

"அந்த லிஸ்ட்ல இந்த அட்ரஸ் இருக்கான்னு பாருங்க... சுபாஷ், நெம்பர் தர்ட்டி டூ, டாக்டர் சில்வா ரோடு, தாதர், பம்பாய்."

"ஒன் மினிட் ஸார்."

விவேக் காத்திருந்தான்.

இரண்டு நிமிஷங்களுக்குப் பின் —

கிஷோர் கரகரத்தார்!

"நீங்க சொன்ன அட்ரஸ் இருக்கு ஸார். அவரோட டெஸிக்னேஷன் ஏர்போர்ட் ஸ்டோர் இன்சார்ஜ்...?"

"கரெக்ட்..."

விவேக் செக்யூரிட்டி ஃபோர்ஸ் ஜீப்பில் தாதரைத் தொட்டு, டாக்டர் சில்வா ரோட்டின் 32—ஆம் நெம்பர் வீட்டுக்கு முன்னால் இறங்கிய போது விடிகாலை நான்கு மணி. ரோட்டின் இரண்டு பக்கங்களிலும் சோடி

யம் வேப்பர் விளக்குகள் பிரகாசமாய் இருக்க, செக்யூரிட்டி கார்ட்ஸ் ரைஃபிள்களோடும், ஏராளமான பூட்ஸ் சத்தங்களோடும் வீட்டைச் சூழ்ந்து கொண்டார்கள்.

விவேக், கதவில் தொங்கியபூட்டின் வாய்க்குச் சாவியைக் கொடுத்துத் திருகினான். 'க்ளிக்.'

பூட்டு விடுபட்டதும் கதவைத் தள்ளினான்.

அறை இருட்டுக்குள் தெரிந்தது. மெல்ல உள்ளே நுழைந்து, சுவரில் இருந்த ஸ்விட்ச் போர்டைத் தேடி, ஸ்விட்ச்களை அழுத்தினான். ஒரு நாற்பது வாட்ஸ் பல்பு உடனே தன்னுடைய இருப்பிடத்தைக் காட்டிக் கொள்ள, ட்யூப்லைட் யோசித்துவிட்டு, குபீரென்று வெளிச்சத்தைக் கொட்டியது.

அறை வசதியாய் இருந்தது. இடது பக்கச் சுவரோரமாய் டீ.வி., ஃப்ரிஜ், வலது பக்கச் சுவரோரமாய் பீரோ, கட்டில் — மேஜை... குஷன் நாற்காலி... டிபாய்... ஷெல்ஃப்.

மேஜையைக் கிளறினான். முதல் இழுப்பறையில் நிறைய புத்தகங்கள். பெரும்பாலானவை ஏர்போர்ட் சம்பந்தப்பட்ட புத்தகங்கள். கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட நான்கைந்து புத்தகங்கள்.

மேஜையின் இரண்டாவது அறையில் ஒரு லெட்டர் பேட், டயரி, அதற்குக் கீழே... ஒரு 'சால்தான்' பிரசுரம். தபாலில் வந்த 'தண்டர்' பத்திரிகைகள். மேலே சுபாஷின் விலாசம்.

டயரியை எடுத்தான் விவேக். அது பாக்கெட் டயரி. டயரியின் பெரும்பாலான பக்கங்கள் பாலைவனமாய்த் தெரிய, ஒரு சில பக்கத்தில் மட்டும் ஸ்டோர்ஸ் சம்பந்தப்பட்ட குறிப்புகள். விவேக் பக்கங்களைப் புரட்டிக் கொண்டு வந்தான்.

கடைசிப்பக்கத்திற்குவந்தபோதுபார்வை நின்றது.

சில எண்கள்.

*1000, 0100, 0100, 0010, 1001, 0110, 1000, 0100, 0001, 0101, 0010, 0110.*

விவேக்கின் நெற்றி சுருங்கியது.

இது என்ன எண்கள்?

டயரியை அப்படியே வைத்துவிட்டு, மேஜையின் மூன்றாவது அறையைக் கிளறினான். நிறைய சால்தான் பிரசுரங்கள். பிரசுரங்களுக்கு நடுவே ஒரு இன்லாண்ட் கவர். ஏற்கெனவே பிரிக்கப்பட்டிருந்த கவர். ஃப்ரம் அட்ரஸில் வெறுமை. 'டு' அட்ரஸில் சுபாஷின் பெயர்... தாதர் அட்ரஸ்.

# இருப்பு விழா



கவரைப் பிரித்துப் படித்தான்.

உள்ளே நீளமாய் —

ஒரே ஒரு வரி. அதுவும் எண்களில். 43 **4F 4E 54 41 43 54 48 41 52 31 53 48 41 56 30 49 44 49 4E 50 45 52 53 30 4E 45 41 47 4C 45 4E 4F 32 33**

விவேக் பிடரியைத் தேய்த்துக் கொண்டான். ஆங்கிலத்தின் இருபத்தியாறு எழுத்துக்களையும் — ஆல்பபடிக் வரிசைப்படி பொருத்திப் பார்த்தான். இந்த விசித்திரமான எண்கள் அதனோடு — பொருந்தவில்லை.

'இது என்ன வகையான கோட் வேர்ட்ஸ்?' — விவேக் குழப்பமாய் அந்த எண்களையே பார்த்துக் கொண்டிருந்து விட்டுப் பார்வையை உயர்த்த, மேஜையின் முதல் இழுப்பறையில் நீட்டிக் கொண்டிருந்த அந்த கம்ப்யூட்டர் புத்தகம் கண்ணில் பட்டது. லாமினேஷன் செய்யப்பட்ட அட்டையில் **CPU — AND ASCII** எழுத்துக்களும் அதன் பின்னணியில் சில எண்களும் தெரிந்தன.

விவேக்கின் மூளை கூர்சீவப்பட்ட பென்சிலாயிற்று.

அந்தப் புத்தகத்தை எடுத்தான். முதல் பக்கத்தைத் திறந்தான். **AMERICAN STANDARD CODE FOR INFORMATION INTERCHANGE** - வாசகமும் — **'CENTRAL PROCESSING UNIT'** என்ற வாசகமும் கண்ணில் அடித்தன. சுபாஷுக்குக் கம்ப்யூட்டர் சயன்ஸில் இண்ட்ரஸ்ட் இருந்திருக்கிறது.

விவேக் உஷாரானான்.

லெட்டரிலும், பாக்கெட் டயரியிலும் இருந்த எண்கள் 'கேரக்டரோடு' சம்பந்தப்பட்ட 'கோட்' வரிசை.

அந்தப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டி கோட் வரிசையைத் தேடினான்.

கிடைத்தது.

**A—41, B—42, C—43, D—44, E—45, F—46, G—47, H—48, I—49, J—4A, K—4B, L—4C, M—4D, N—4E, O—4F, P—50, Q—51, R—52, S—53, T—54, U—55, V—56, W—57, X—58, Y—59, Z—5A (ZERO) 0—30, 1—31, 2—32, 3—33, 4—34, 5—35, 6—36 7—37, 8—38, 9—39.**

இன்லெண்ட் லெட்டரில் இருந்த எண்களை ஒரு பேப்பரில் எழுதிக் கொண்டு எழுத்துக்களைப் பொருத்திப் பார்த்தான் விவேக். வாசகம் பிறந்தது. **'CONTACT HARISH AVOID PERSON. EAGLE No. 23'**

'ஹரீஷ்...?'

'யார் அந்த ஹரீஷ்? எங்கேயோ கேட்ட பெயராக இருக்கிறதே?' யோசித்துக் கொண்டே பாக்கெட் டயரியில் கிடைத்த எண்களோடு அதே பக்கத்தில் இருந்த ஹெக்ஸாடெஸிமல் பைனரி எண்களை ஒப்பிட்டான். **0—0000, 1—0001, 2—0010,** *3-* **0011, 4—0100, 5—0101, 6—0110, 7—0111, 8—1000, 9—1001, 10—1010.**

பொருத்திப் பார்த்ததில் விவேக்கிற்கு — இரண்டு 'எண் வரிசை' கிடைத்தது. *844296, 841526.*

''உங்க தலைவர் எதற்கு திடீரென்று நீச்சல் கற்றுக் கொள்கிறார்?''

'''தேசிய நீரோட்டத்தில்' கலந்து கொள்ளப் போகிறாராம்! அதனால் தான்.''

— க. சரவணகுமார்.

'அநேகமாய் இது டெலிபோன் எண்களாக இருக்கலாம்!'

விவேக் வெளியே வந்து அந்த வீட்டைப் பூட்டிக் கொண்டான். செக்யூரிடி கார்ட்ஸில் இரண்டு பேரை மட்டும் அங்கே இருக்கச் சொல்லி விட்டு எஞ்சியவர்களோடு ஜீப்பில் தாதர் டெலிபோன் எக்ஸ்சேஞ்சிற்கு வந்தான். என்கொய்ரியில் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு விசாரித்தான். கௌண்டரில் தூக்கம் கெட்ட அழகான பெண் உட்கார்ந்திருந்தாள்.

''*844296, 841526* — டெலிபோன் நெம்பர்ஸ் யார் பேர்ல இருக்குன்னு சொல்ல முடியுமா...?''

அவள் லிஸ்ட்டைப் பார்த்து விட்டு —

''மிஸ்டர் பூபேஷ்! நெம்பர் எய்ட்ஃபோர்ட்டு மௌலானா ஆசாத் ரோடு, பைகுல்லா, பாம்பே..'' என்றாள் சலனமில்லாத குரலில்.

விவேக் அதிர்ந்தான்.

'பூபேஷ்?'

வெளியே நின்றிருந்த ஜீப்பை நோக்கி ஓடினான் விவேக்.

**ப**ம்பாய் அந்த விடியற்காலை நேரத்தில் ஃப்ரிஜ்ஜில் வைத்த பண்டம் மாதிரி ஜில்லென்று இருந்தது. ஆள் நடமாட்டம் அற்ற தெருக்களில் கார்ப்பரேஷன் விளக்குகள் தீவிரமாய் ஒளிர, ஜீப் மௌலானா ஆசாத் ரோட்டை நோக்கி ஒரு கத்தி வீச்சு மாதிரி போய்க் கொண்டிருந்தது. ஜீப் போய்க் கொண்டிருக்கும்போதே ஏர்—போர்ட்டில் இருக்கும் கமிஷனர் ஹில்லோடு வயர்லெஸ்ஸில் தொடர்பு கொண்டான் விவேக்.

''ஹரீஷ்... வேறு யாருமில்லை ஸார். பூபேஷின் மகன்தான்.''

மறுமுனையில் ஹில் ஆச்சர்யப்பட்டார்.

''பூபேஷின் மகன் ஒரு இந்தியக் கழுகா...? இது எப்படி பூபேஷுக்குத் தெரியாமல் போயிற்று...?''

''பூபேஷும் ஓர் இந்தியக் கழுகா ஏன்.... இருந்திருக்கக் கூடாது?''

''விவேக்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?''

''ஸார்! இது என் அனுமானம்தான். அடுத்த சில நிமிஷங்களில் எல்லா உண்மைகளும் வெளியே வந்து விடும்.''

''பூபேஷ் வீட்டுக்கு நானும் வரட்டுமா?''

''சுபாஷிடம் விசாரணையை முடித்துக் கொண்டீர்களா?''

''அவனை என்னால் பேச வைக்க முடியவில்லையே...''



''ஓ.கே. அவனுடைய பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டு நீங்கள் பூபேஷ் வீட்டுக்கு வந்து விடுங்கள். ஜீப் இப்போது பூபேஷ் வீட்டை நெருங்கிக் கொண்டிருக்கிறது...''

**வி**வேக் கீழே இறங்கினான். பங்களா இருட்டுக்குள் இருக்க, காம்பௌண்ட் கேட் கால் பாகம் திறந்து கிடந்தது.

''பி... அலர்ட்... செக்யூரிடி கார்ட்ஸ்!''— விவேக் குரல் கொடுக்க, அவர்கள் உயர்த்திய ரைஃபிள்கள் சகிதம் பக்கவாட்டில் நடந்து வந்தார்கள். பார்வைகள் சுழன்றன.

'சர்ர்ரக்... சர்ர்ரக்'

போர்டிகோ படிகளில் ஏறிக் கதவைத் தொட்டார்கள். கதவு இறுக்கமாய் சாத்திக் கிடந்தது. விவேக் அண்ணாந்து பார்த்து கதவின் நெற்றியில் இருந்த காலிங்பெல்லின் மேல் கையை வைத்தான். ''ர்ர்ர்ர்ர்ர்''

நிசப்தம்.

விவேக் இரண்டு கார்ட்ஸைக் கதவருகே நிற்க வைத்து விட்டு மீதமிருந்த இரண்டு பேரோடு பின்பக்கம் போனான். குரோட்டன்ஸ் செடிகள் செழித்து வளர்ந்திருந்த தொட்டிகளைத் தாண்டிக் கொண்டு வீட்டின் பின்பக்கச் சுவருக்கு வந்து, மேலே எம்பினான். சுவரின் உச்சிக்குச் சுலபமாய்ப் போய், உள்ளே இருட்டில் இடம் பார்த்துக் குதித்தான். கார்ட்ஸும் பின் தொடர்ந்து குதித்தார்கள். மூன்று பேரும் இணையாய் நடந்தார்கள்.

''கார்ட்ஸ்!''

''ஸார்...''

''யாரைச் சுடுவதாக இருந்தாலும் சரி.. முழங்காலுக்குக் கீழே சுடுங்கள்.''

''எஸ்... ஸார்.''

பங்களாவின் எல்லா அறைகளிலும் இருட்டு தெரிய, ஹால் கதவை நெருங்கி, அதன் மேல் கையை வைத்தார்கள். கதவு எதிர்ப்பில்லாமல் உள்ளே போயிற்று. இருட்டான ஹால் கண்ணுக்குச் சிக்கியது. ஜாக்கிரதையாய் உள்ளே நுழைந்தார்கள். பூனை நடை நடந்தார்கள்.

விவேக் பத்தடி நடத்திருப்பான். 'த்தட்'டென்று நின்றான். ஹாலின் மையத்தில் யாரோ குப்புற விழுந்து கிடந்தார்கள்.

''கார்ட்ஸ்! ஸ்விட்ச்சைப் போடுங்க..''

அடுத்த சில விநாடிகளில் ஸ்விட்ச் தட்டப்பட ஹாலின் விதானத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த விளக்கு உயிர் பெற்றது. வெளிச்சத்தில் குப்புறக் கிடந்த உடலைப் புரட்டினான் விவேக்.

மார்பிலும் கழுத்திலும் உறைந்து போன ரத்தத்தோடும், நிலைகுத்திப்போன விழிகளோடும் சீலிங்கை வெறித்தான் ஹரீஷ்.

''மைகுட்னஸ்!'' விவேக் சலிப்போடு தலையை உயர்த்திய அதே விநாடி அவனுடைய முதுகுக்குப் பின்னால் யாரோ மூச்சிரைக்கிற மாதிரி சத்தம் கேட்டது.

திடுக்கிட்டுப் போய்த் திரும்பினான்.

வெகு பக்கத்தில் இருந்த மாடிப் படிகளுக்குக் கீழே யாரோ அடைப்புக் குறி மாதிரி விழுந்திருந்தார்கள்.

விவேக் எழுந்து ஓடினான்.

கீழே விழுந்திருந்த அந்தப் பெண், நைட்டியில் கொஞ்சம் ரத்தச் சகதியோடு தெரிந்தாள். விவேக் அவளருகே குனிந்தான். கார்ட்களில் ஒருவர் டாக்டரை வரவழைப்பதற்காக ஹாலில் இருந்த டெலிபோனை நோக்கி ஓடினார்.

விவேக் அந்தப் பெண்ணை அள்ளினான்... இரண்டு கைகளாலும்.

''நீ... நீ... பூபேஷோட டாடர்தானே?''

''ஆ...ஆமா... ஸா...ஸார்... நான் சோபியா....'' அவள் பேசத் திணறினாள்.

''சோபியா...! உன்னையும் ஹரீஷையும் சுட்டது யாரு?'' விவேக் பதற்றமாய்க் கேட்டான்.

சோபியா விழிகளைச் சோர்வாய் மூடி விட்டு பின் திறந்தாள். ''ஸ... ஸார்! ஹ... ஹ... ஹரீஷும் நா.. நானும்... ஒருத்தரையொருத்தர்... சுட்டுக்கிட்டோம்... நா... நா... நான் ச..ரியா.. அ..வ..னோ...ட... நெ...ஞ்சுக்கு... பார்த்துச்... சு.... சு... சு... சுட்டேன். ஆ..னா.... அவன்... எ... என்னைச் சரியாச் சு... சுடலை... அதான்... இன்... இன்னமும்.... உ.... உயிரோடு இ.... இருக்கேன்...''

''எதுக்காகச் சுட்டுக்கிட்டீங்க?''

''ஸ... ஸார்...''

''சொல்லும்மா...''

''இ... இதை... நீ... நீங்க... எ... என்னோட ம... மரண வாக்குமூலமாவே... எ.. எடுத்துக்கலாம் ஸார்... அப்பாவையும்... அ... அண்ணனையும்... எ... எவ்வளவோ ந... நல்லவங்கன்னு நி... நினைச்சுக்கிட்டிருந்தேன். ஆ... ஆனா... அவங்க... ரெ... ரெண்டு பே... பேருமே... இ... இந்தியக் கழுகுகளுக்கு... ஆதரவானவங்கன்னு... தெரி... தெரிஞ்சப்ப... எ... என்னால அ... அந்த அதிர்ச்சியைத் தா... தாங்கிக்க மு... முடியலை ஸார். நேத்து... ரா... ராத்திரிதான் அண்ணன் ஹரீஷோட சுயரூபமே தெரிஞ்சது... ரெண்டு ஒலிம்பிக் வீரர்கள் புறப்பட்டு... போ... போகிற... ஃப்ளைட்டில் டைனமைட் ஃபிக்ஸ் பண்ணியிருக்கிறதாகவும், அது கொஞ்ச நேரத்துல வெடிக்கப் போறதாகவும்... அண்ணன் யார்கிட்டேயோ சொ... சொல்லிட்டிருந்ததைக் கேட்டேன். நான். உ... உ... உடனே... ஏர்போர்ட்டுக்கு... போ... போன் பண்ணி... த... தகவல்... சொ... சொன்னேன்.''

வேகமாய்ப் பேசியதில் மூச்சிரைத்தது சோபியாவுக்கு. வாயினால் மூச்சை வாங்கி, சில விநாடிகள் ஆசுவாசமாய் இழுத்துவிட்



**"என் மனைவி லீவு நாள்னா என்னைச் சமைக்க வேண்டாம்னுடுவா! அவளே சமைச்சுக்குவா..."**

**"அதுக்கு ஏன்யா சலிச்சுக்கிறே...?"**

**"அதுக்குப் பதிலா வீடெல்லாம் ஒட்டடை அடிக்கச் சொல்லிடறாளே!"**

**— ரம்யசேகர்**

டுத் தொடர்ந்தான். "நா... நான் போன் பண்ணி ஏர்போர்ட்டுக்குத் தகவல்... கொ... கொடுத்ததை அண்ணன்... தெரிஞ்சுக்கிட்டு... என்னை அடிச்சி மயக்கமாக்கி, மா... மாடி ரூம்ல வெ... வெச்சு அடைச்சுட்டான். ஆ... ஆனா... ஒரு மணி நேரத்துக்கு முந்தி... நான்... அந்த ரூம்லேயிருந்து... த... தப்பிச்சு... வெளியே வந்தேன். அ... அந்தச் சமயத்துலதான்... அ... அண்ணன்... பத்து பதினைஞ்சு பேரோட ஸ்டோர் ரூமுக்குள்ளே நுழைஞ்சுக்கிட்டிருந்தான். நா... நானும்... பி... பின்னாடியே போ... போய்... எ... எட்டிப் பார்த்தேன்... ஸ்டோர் ரூம்ல... ஒரு கடப்பைக் கல்லை நகர்த்தி வெச்சுட்டு— எல்லோரும் உள்ளே இறங்கிக்கிட்டிருந்தாங்க... கடைசி ஆளா... அ... அண்ணன் இறங்கும் போது... எ... எ... என்னைப் பார்த்துட்டான். கோபமா என்னைப் பார்த்துக் கத்திக்கிட்டே ஓடிவந்தான். அவன் எ... எப்படியும் எ... என்னைக் கொ... கொல்லப் போறான்னு... தெரிஞ்சதும்... நானும் எ... என்னோட உயிரைக்... கா... காப்பாத்திக்கிறதுக்காக... அ... அப்பாவோட... பீரோவைத்... தி... திறந்து ரி... ரிவால்வரை... எ... எடுத்துக்கிட்டேன்.... அ... அண்ணன்தான்... எ... என்னை... மொதல்ல... சுட்டான்... தோ... தோட்டாவை... இ... இடுப்போட இடது பக்கத்துல வாங்கிக்கிட்டுச் சரியும் போதே... அவனையும் சுட்டேன்... அவன் மார்பிலே தோட்டாவை வாங்கிக்கிட்டுச் சரியறதை திருப்தியோடு... பார்த்தேன்! ஸ்டோர் ரூம் நி... நிலவறைக்குள்ளே... போ... போயிருக்கிற... அந்த... இந்தியக் கழுகுகள்... தப்பிச்சுடக் கூடாதுங்கிற... தவிப்புல... ரத்தத்தைச் சிந்திக்கிட்டே போய்... ஸ்டோர் ரூம் கதவைச் சா... சாத்தி... லா... லாக் பண்ணினேன்..."

விவேக் பதற்றமாய்க் கேட்டான்.

"அந்த இந்தியக் கழுகுகள் இப்போ... உள்ளேதான் இருக்காங்களா...?"

"ஆ... ஆமா..."

"சோபியா...!"

"ம்..."

"உங்கப்பாவும் ஓர் இந்தியக் கழுகுதானே?"

"ஆமா... ஸார்..."

"அவர் ஏன் கொலை செய்யப்பட்டார்?"

"அப்பா... மேல... போ... போலீஸ் கமிஷனர் சந்தேகப்படறதா... இ... இந்தியக் கழுகுகள் சி... சில பேர்... நினைச்சாங்களாம். போ... போலீஸோட கவனத்தைத் திசை திருப்புறதுக்காக... அ... அண்ணனுக்கே... விஷயத்தைச் சொ... சொல்லாமே... அ... அப்பாவைத் தீ... தீர்த்துக்க... கட்டியிருக்காங்க..."

விவேக் அடுத்த கேள்விக்குப் போகுமுன்—

'ரொய்ங்ங்... ரொய்ய்ங்ங்.'

ஆம்புலன்ஸ் வேனின் அலறல் பங்களாவின்—காம்பௌண்ட் கேட் அருகே கேட்டது.

**ம**றுநாள் காலை பத்து மணி.

பத்திரிகை நிருபர்களுக்கு மத்தியில் சிக்கியிருந்தான் விவேக். அருகே போலீஸ் கமிஷனர் ஹரில். ரூபலா. கேள்விகள் விவேக்கை நோக்கி — நான்கு திசைகளினின்றும் வந்தன.

"பூபேஷ் பங்களாவின் நிலவறைக்குள் மொத்தம் எத்தனை இந்தியக் கழுகுகள் இருந்தார்கள்?"

"பதினோரு பேர்."

"இதுவரை எத்தனை பேர்களைக் கைது செய்திருக்கிறீர்கள்?"

"அரசாங்கத்தின் எல்லா மட்டங்களிலும் ஊடுருவியிருந்த நாற்பத்தியொரு இந்தியக் கழுகுகளைப் பிடித்துள்ளோம்."

"ஒலிம்பிக் சங்கத் தலைவரான பூபேஷே... இப்படி நடந்திருப்பது குறித்து நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...?"

"இந்தியனாகப் பிறந்த ஒவ்வொருவரும் வெட்கப்பட வேண்டிய விஷயம்."

"ஒலிம்பிக் வீரர்கள் ஒலிம்பியாட்டிற்கு எப்போது புறப்பட்டுப் போகப் போகிறார்கள்...?"

"இன்று மாலையே...!"

"ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கும் சோபியாவின் உடல் நிலை இப்போது... எப்படியுள்ளது?"

"டாக்டர்கள் பன்னிரண்டு மணி நேரம் கெடு வைத்திருக்கிறார்கள்."

விவேக் சொல்லிக் கொண்டிருக்கும் போதே —

அறையிலிருந்த டெலிபோன் துடித்தது. எல்லோரும் டெலிபோனையே பார்த்தார்கள். விவேக் மெதுவாக நடந்து போய் ரிஸீவரை எடுத்தான்.

"ஹலோ."

"நான் டாக்டர் மெஹ்ரா..."

"சொல்லுங்க டாக்டர்..."

"சோபியா..."

"சோபியா...?"

"அபாயக் கட்டத்தைத் தாண்டிட்டா... மிராக்குலஸ் ரெகவரி...! விவேக்கின் முகம் மலர்வதைப் பார்த்து — ஒவ்வொருவராய் மலர ஆரம்பித்தார்கள்.

(முற்றும்)



# சார்லி சாப்ளின் செய்தி வாசிக்கிறார்!

○○ தொலைக் காட்சியில், முக்கியமாகத் தேசிய நிகழ்ச்சிகளில், அறிவிப்பாளர்களும், செய்தி வாசிப்பவர்களும் ஆங்கிலம், மற்றும் தமிழ் வார்த்தைகள் பலவற்றையும் உச்சரிக்கும் விதம் மனத்துக்கு மிகவும் வேதனையளிக்கிறது. உதாரணமாக, தென்னக மாநிலங்களின் பெயர்கள் கர்னாடகா, 'கர்னாடக்' என்றும்; கேரளா, 'கேரல்' என்றும்; தமிழ்நாடு, 'டாமில் நாடு' என்றும் உச்சரிக்கப்படுகின்றன. **'Yoga for better living'** என ஒரு நிகழ்ச்சி. இதில் **'yoga'** எனும் வார்த்தை முழுக்க முழுக்க **'yog'** என்றே குறிப்பிடப்படுகிறது. இனி நாமும் 'நியூ டில்லி' என்பதை 'நியூடில்' என்றே அழைக்கலாமா? வட இந்தியப் பெயர்கள் அனைத்தையும் நாமும் இவ்விதமே சுருக்கினால் அவர்கள் ஏற்பார்களா? தமிழ்ப் பெயர்கள், சினிமாப் பெயர்கள் எல்லாம் நமக்கே தமிழ் மறந்து விடக் கூடிய அளவுக்குப் பயங்கரமாக உச்சரிக்கப்படுகின்றன. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், நம் நாட்டுப் பெயர்களைச் சரியாக உச்சரிக்க முடியாத இவர்கள், வாயில் நுழையாத பல வெளிநாட்டுப் பெயர்களை எப்படியோ கற்றுக் கொண்டு மிகச் சரியாக உச்சரிக்கிறார்கள் என்பது தான்! இவ்விதம் தமிழ், ஆங்கிலச் சொற்களை அவர்கள் இஷ்டத்திற்கு நீட்டியும், சுருக்கியும், மாற்றியும் உச்சரிப்பது தொடர்ந்தால் இது நம்மை விட நம் எதிர்கால சந்ததியினரைத்தான் அதிகம் பாதிக்கும். இப்போதெல்லாம் நம்மை விடக் குழந்தைகள்தான் டீவியை அதிகமாகப் பார்க்கிறார்கள்.

— கோமதி பாலசுப்ரமண்யம், சென்னை — 33.

○○ திருவனந்தபுரம் டீ.வி. நிலைய செய்தி ஒளிபரப்பு. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் மாறி மாறி செய்திகள் வாசிப்பது வழக்கம்.

அன்று, முதலில் பெண் செய்தி அறிவிக்கத் தொடங்கினாள். திடீரென்று காட்சி மாறி, அடுத்தபடியாக வாசிக்க வேண்டியவரைக் காட்டினார்கள். அவரோ தாம் திரையில் தோன்றுவது தெரியாமல் தமது 'டை'யைச் சரிபார்த்துக் கொண்டும், முகத்தைத் துடைத்துக் கொண்டும் காலரை நேராக்கிக் கொண்டும் தயாராகி வந்தார். அவசர அவசரமாகக் காட்சி மாற்றப்பட்டு மீண்டும் அந்தப் பெண்மணி காட்டப்பட்டார். அந் நேரம் அவர் செய்தி அறிவிப்பை நிறுத்தி விட்டு ''ரெடிமேட்'' சிரிப்பை உதிர்த்துக் கொண்டிருந்தார். சற்று நேரத்தில் ஆண் குரல் அறிவிப்பைத் தொடர்ந்தது. காட்சியோ மாறவில்லை. பெண்ணோ தாம் திரையில் தோன்றுவதை அறியாதவராய், முகத்தைத் துடைத்து விட்டுச் சிறிய கண்ணாடியில் பார்த்து ஒப்பனை செய்து கொள்ள ஆரம்பித்து விட்டார்! மீண்டும் அவசரம் அவசரமாகக் காட்சி மாற்றப்பட்டது. அன்றைய நிகழ்ச்சி சார்லி சாப்ளின் தொடரைப் பார்ப்பது போன்று எல்லோரையும் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைத்தது.

— எம். ஏ. ராஜ், திருவனந்தபுரம்.

○○ வீடே புது டீவியின் வருகைக்காகக் காத்திருந்தது. அண்ணன் டீ.வி. வாங்கி எடுத்து வர இரவாகி விட்டது. அன்றுதான் கிராமத்தில் இருந்து உறவினர்களும் போனசாக என் முறைப் பெண்ணும் வந்திருந்தனர். 'படிப்பு முடிந்தவுடன் திருமணந்தான்' என என்னையும் வைத்துக் கொண்டு மற்றவர்கள் அவளைக் கிண்டல் செய்தனர். அவளும் அதை ரசிப்பதும் வீட்டில் உள்ளவர்களுக்குத் தெரியாமல் மறைந்து நின்று என்னைப் பார்ப்பதுமாக இருந்தாள். இந்த



வேளையில் அண்ணன் டீ.வி.யை ஹாலில் ஆன் செய்ய, அப்போது சித்ரமாலாவில் 'மறைந்திருந்து பார்க்கும் மர்மமென்ன?' என்ற பாடல் ஒளிபரப்பாகியது. வீட்டில் உள்ளவர்கள் சித்ரமாலாவில் முதன் முதலில் தமிழ்ப் பாடல் என மகிழ்ந்தாலும் மிக அதிகமாக மகிழ்ந்து ரசித்தது நாங்கள் இருவர்தான் என்பதை மற்றவர்கள் அறிய வாய்ப்பில்லை!

— ஜி. மாஜினி, திருச்சி — 1.

○○ ஒரு நண்பர் வீட்டில் பேசிக் கொண்டிருந்தேன். டீ.வி. செய்திகள் ஆரம்பிக்கும் நேரம். நண்பரின் ஆறு வயதுப் பெண் திடீரென்று நண்பரைப் பார்த்து 'நீங்கள் என்ன ஆணா, பெண்ணா?' என்று கேட்க, அவர் 'நான் பெண்தான்' என்றார். இதே கேள்வியை அவள் தன் அம்மாவிடம் கேட்க, 'நான் ஆண்!' என்று அவர் பதில் சொல்ல நான் குழப்பத்தின் எல்லையைத் தொட்டேன்.

நண்பர் விளக்கினார்: 'தினசரி செய்திகள் ஒளிபரப்பாகும் போது படிக்கப் போவது ஆணா, பெண்ணா என்று என் பெண் எங்களைக் கேட்பாள். நாங்களும் எங்கள் ஊகத்தைச் சொல்லுவோம்! இது தான் விஷயம்!'

— ஆர். பாலாஜி, சென்னை — 24.

○○ படிப்பவர்கள் சிரித்தாக வேண்டும் என்பதற்காக நான் இதை எழுதவில்லை. சிந்திக்க சிறிது நேரம் ஒதுக்குங்கள் என்று கேட்டுக் கொள்ளவே எழுதுகிறேன்.

அன்று ஏனோ, டீ.வி. நிகழ்ச்சிகள் சரியாகத் தெரியாததால் ஆண்டனாவை சரி செய்தால் சரியாகிவிடும் என்ற நம்பிக்கையில் மாடிக்கு ஏறினார் அவர். மொட்டை மாடி கைப்பிடி சுவரில் நின்று கொண்டு ஆண்டனா பைப்பைப் பிடித்துச் சரி செய்ய முயற்சித்த போது திடீர் மின் அதிர்ச்சி ஏற்பட்டு விழுந்து விட்டார். வீட்டிலிருந்தவர்கள் துடிதுடித்துப் போய் அருகிலேயே இருந்த தீ அணைக்கும் அலுவலகம் சென்று செய்தி கொடுத்தனர். அவர்களும் உதவ ஓடோடி வந்தனர். ஆனால் பயன் இல்லை. இல்லத் தலைவர் இறந்து விட்டார். இளம் மனைவியும் ஒரு மகனும் உள்ள அக் குடும்பம் துக்க வீடாக மாறி விட்டது.

சிறிது சிந்தித்திருந்தால்! சிந்தித்த பிறகு செயல்பட்டிருந்தால்...

பயிற்சி பெற்ற டீ.வி. மெக்கானிக்குகள் இருக்கிறார்கள் அவர்களை அழைத்து வந்து பழுது பார்த்திருக்கலாம் அல்லவா?

— தே. பொன்னையா, தூத்துக்குடி.

## அடுத்த இதழில்...



## ஆளை மயக்கும் அந்தமான் தீவுகள்

வண்ணப் படங்களுடன் சிறப்புக் கட்டுரை...

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.



# எண்ணிப் பாருங்கள்—இன்னும் பத்து ஆண்டுகளில் இவர்கள் எப்படி இருப்பார்கள் என்று.

நீங்களே பெருமிதப்படக்கூடிய வகையில் ஆரோக்கியத்தின் சின்னமாக இவர்கள் திகழக்கூடும். ஏனெனில் தாய் என்ற முறையில் உங்களால் முடிந்த எல்லாவற்றையும் இவர்களின் ஒளிமயமான எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நீங்கள் செய்து கொண்டிருக்கின்றீர்கள்.

நீங்கள் காட்டும் அன்பின் முக்கிய அம்சமே இவர்களின் உடல் நலனுக்கு உகந்த ஊட்டச்சத்துகளை முழுமையாகப் பெற்றுத் தருவதுதானே.

ஹார்லிக்ஸ் அளிக்கும் ஊட்டச்சத்து. இவர்களின் வளரும் வயதுக்கேற்ற ஊட்டச் சத்து.



"ஹார்லிக்ஸில் அடங்கியுள்ள முக்கிய ஊட்டச்சத்துகள்—புரோட்டீன்ஸ், விட்டமின்ஸ், மினரல்ஸ் மற்றும் கார்போஹைட்ரேட்ஸ் ஆரோக்கியத்திற்கும், வளர்ச்சிக்கும் மிக உகந்தவை.

இதில் சேர்க்கப்பட்டுள்ள கூடுதல் கால்ஷியம் வலுவான பற்களுக்கும், ஆரோக்கியமான எலும்புகளுக்கும் இன்றியமையாதது.

வளரும் குழந்தையின் வயதுக்கேற்ற தெம்பும், முழுமையான ஆரோக்கியமும் அளிக்கவல்லது."




சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA 6223 TAM

REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka

PONDS

பொன் நகைகள்
மின்னிட.... சந்தன
நறுமணம் கமழ்ந்திட....

இனிய உணர்வுகள் மனதில்
மலர்ந்திடும் கணங்கள். உங்கள்
மேனியில் பொன் நகைகள்
மின்னிட, தூய சந்தனத்தின்
நறுமணம் கமழ்ந்திட இதுவரை
அனுபவித்தறியா உணர்வுகளால்
உள்ளம் பூரிக்கிறது; பெண்மை
உங்களிடம் பூரண பொலிவு
பெறுகிறது.




அரிய நறுமணம்.
மதிப்பில் பொன்னைப்
போல் உயர்ந்தது.

பாண்ட்ஸ்
சாண்டல்
டால்க்

HTA 7023